Regd: No. TN-MS C/ 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS Phone 420212 4 பக்கம் விலை 50 காசு
POST WITHOUT PRE-PAYMENT LICENCE NO G 6 - TN MS (C) P. P 55



**மாணவர் கடமை**

சமுதாயத்திற்கு உழைக்க வேண்டும் என்ற ஆர்வத்திலுள்ள மாணவர்கள் கிராமங்களுக்குச் சென்று பாமர மக்களுக்கு அறிவு புகட்ட வேண்டும்.

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

**வாலிபப் பருவம்**

வாலிபப் பருவம் அபாயகரமான காதம் சுலபத்தில் நெருப்பு பற்றக்கூடிய பொருளைப் போல் மிக பத்திரமாய் பாதுகாக்க வேண்டிய பருவமாகும்.

-தந்தை பெரியார்

மலர்: 9 சென்னை 26 - 10 - 1984 வெள்ளி ** வெளியீடு 27 - 10 - 1984 சனி இதழ் 10




## கற்பனைக் கதைகள்!

பேரன்புடையீர்,

எத்தனையோ கொடுமைகளைப் புரிந்து நமது நெஞ்சைப்பிளந்த 'காலதேவன்' தனது கருணைக் கண்களை நம்பால் செலுத்துகிறான்போலும் தர்மதேவனின் தலைமகனாம் புரட்சித்தலைவரை மீண்டும் நம்மிடை ஒப்படைக்க இசைவு தந்திருப்பது போல் தோன்றுகிறது! நல்ல செய்திகளை மருத்துவர்கள் தெரிவிக்கிறார்கள்! அவர்களது முகத்தில் தவழும் புன்னகை நமக்கு புதுத்தெம்பைத் தருகிறது.

**எல்லா மதத்தினரும், எல்லா அரசியல் கட்சியினரும் சேர்ந்து விடுத்த வேண்டுகோளுக்குப் பலன் தெரிவது போல் உள்ளது!**

புரட்சித்தலைவரால் மக்கள், மொழி, கட்சி, கலாச்சாரத்திற்கு அப்பால் சென்று பொழியும் அன்பு மழையைக் கண்டு பொறுக்க முடியாதவர்கள் தங்களது "பொய் நானூறு" பலிக்காதே என்று கவலைப்படுவதாகக் கேள்வி!

**புரட்சித்தலைவர் உடல்நலம் பெற்றுவரும் இவ்வேளையில் எதையாவது சொல்லி எப்படியாவது நம்மிடை பிளவுஏற்படுத்த முயற்சிக்கின்றனர். 'ஆட்டு வால் பட்டு கோட்டை இடிந்து விடாது' என்பதை அவர்கள் அறிவார்கள். இருந்தாலும் தொடர்ந்து செய்கிறார்கள்.**

தமிழ் மண் தந்தை பெரியாரின் பகுத்தறிவும், பேரறிஞர் அண்ணா அவர்களின் அரசியல் பண்பாலும் 'திராவிட ஆட்சிக்கென்றே' பதப்படுத்தப் பட்டுள்ளது! இங்கே வேறு பயிர்கள் முளைக்காது! பூந்தோட்டத்தில் 'கள்ளிச்செடி' அனுமதிக்க முடியாது! முளைத்தால் முளையிலேயே கிள்ளி எறியப்படும்! இதனைத்தான் மாண்புமிகு புரட்சித்தலைவர் அவர்கள் "தமிழகத்தில் திராவிட இனந்தான்- அண்ணாவின் வழிவந்தவர்கள்தான் ஆளமுடியும்" என்றார்.

**இதனை உணராத சிலர் தவறான தகவல்களை பரப்பி வருகின்றனர்! இதில் தமிழகத்தைச் சார்ந்த ஓர் பெண்மணி வடநாட்டிலிருந்து வரும் ஆங்கில ஏட்டில் வேண்டுமென்று பொய்ச் செய்திகளை வெளியிட்டுள்ளார்!**

நமது கழகமும், இந்திரா காங்கிரசும் இணைய இருப்பதாக "நம்பகமான தகவல்களிலிருந்து தெரிய வருகிறது" என்று எழுதியுள்ளார்! இத்தகைய ஆதாரமற்ற செய்திகளை வெளியிடுவதில் தமிழகத்தில் உள்ள ஏடுகள்தான் இனியகசகம் காணுகிறது என்று எண்ணியிருந்தோம். இந்த நிலை எடுத்துள்ள அந்த அம்மையாருக்கு நமது ஆழ்ந்த அனுதாபங்கள்! வேர் இல்லாத மரத்தில் பழம் தொங்குகிறதென்று கூறினால் புத்தியுள்ளவர்கள் ஏற்கமாட்டார்கள்.

ஆதாரமற்ற செய்தியை வலிந்து வரவழைத்துக் கொண்டு யாரோ கூறியதாக பல கற்பனைக் கதைகளை புனைந்துள்ளார் அந்த அம்மையார்!

அ. இ. அ. தி. மு. கவை விட்டு

(2-ம் பக்கம் பார்க்க)

### முதல்வர் புரட்சித்தலைவருக்கு

# வலதுகால்-கை நீட்டி மடக்க பயிற்சி

### உடல் நிலை முன்னேற்றம் குறித்து மருத்துவ நிபுணர்கள் திருப்தி

சென்னை, அக். 26- முதல்வர் புரட்சித்தலைவருக்கு தசை இயக்கப் பயிற்சி மேற்கொள்ளப்பட்டுள்ளது. வலது கால். வலது கையை நீட்டி மடக்க குறுகிய கால அளவு பயிற்சி அளிக்கப்பட்டது.

முதல்வரது உடல் நிலையில் இதுவரை ஏற்பட்டு இருக்கும் முன்னேற்றம் திருப்தி அளிப்பதாக மருத்துவ நிபுணர்கள் தெரிவித்துள்ளனர்.

முதல்வர் புரட்சித்தலைவரின் உடல்நிலை குறித்த மருத்துவர்களின் இன்றைய அறிக்கையை வெளியிட்டு அமைச்சர் அண்டே கூறியதாவது:

முதல்வர் புரட்சித்தலைவர் நேற்று இரவு அமைதியாகத்தூங்கினார். அவருடைய நினைவாற்றலில் மேலும் முன்னேற்றம் தெரிகிறது.

முதல்வர் தற்போது இயல்பாக மூச்சு விடுகிறார்.

ரத்தத்தில் வாயு அழுத்தத்தை கணித்து பார்த்ததில் மூச்சு இயக்கம் திருப்திகரமாக இருப்பது புலனாகிறது.

முதல்வரின் இருதய இயக்கமும் சீராக இருக்கிறது.

நேற்று ரத்த சுத்தி கரிப்பு சிகிச்சை நடைபெறவில்லை.

சிறுநீரக இயக்கம் கவனிக்கப்பட்டுவருகிறது.

தசை இயக்கப் பயிற்சி மேற்கொள்ளப்பட்டு வலதுகால், வலது கை இவற்றிற்கு குறுகிய கால அளவிற்கு நேற்று பயிற்சி அளிக்கப்பட்டது.

மருத்துவ நிபுணர்கள் முதல்வர் உடல் நிலையில் இதுவரைஏற்பட்டிருக்கும் முன்னேற்றம் குறித்து திருப்தி தெரிவித்து இருக்கிறார்கள்.

இவ்வாறு அமைச்சர் அண்டே கூறினார்.

ஜப்பான் நிபுணர் கானு மீண்டும் சென்னைக்கு வருவாரா என்று கேட்டதற்கு கானுவை மீண்டும் வருமாறு கேட்டுள்ளோம். ஆனால் அவரது நிகழ்ச்சிகள் எப்படி இருக்கிறது என்று தெரியவில்லை என்று அமைச்சர் கூறினார்.

### இன்று புதுடெல்லியில்

# பிரதமர் இந்திரா-நாவலர் சந்திப்பு

### மத்திய அமைச்சர் வெங்கடசுப்பையா- ஜி. பார்த்தசாரதி ஆகியோரையும் சந்தித்தார்

**புதுடெல்லி, அக். 26- பிரதமர் இந்திரா காந்தியை நிதியமைச்சர் டாக்டர் நாவலர் இன்று முற்பகல் சந்தித்துப் பேசினார். முற்பகல் 11-30 மணி அளவில் இந்த சந்திப்பு நடந்தது.**

நிதி அமைச்சர்டாக்டர் நாவலர் நேற்று இரவு புதுடெல்லி வந்து சேர்ந்தார்.

முதல்வர் புரட்சித்தலைவர் உடல்நலக்குறைவால் மருத்துவ மனையில் சிகிச்சை பெற்று வருவதால்.

முதல்வர் புரட்சித் தலைவர் பொறுப்பில் இருந்த இலாகாக்களை நிதிஅமைச்சர் டாக்டர் நாவலர் கவனித்து வருவார் என்றும், அமைச்சரவைக் கூட்டங்களுக்கு டாக்டர் நாவலர் தலைமை வகிப்பார் என்றும் ஆளுநர் நேற்று மாலை அறிவித்தார்.

நிதி அமைச்சர்டாக்டர் நாவலர் நேற்று இரவு விமானம்மூலம்புதுடெல்லி வந்து சேர்ந்தார்,

டெல்லி வந்த டாக்டர் நாவலர் பிரதமர்இந்திரா காந்தியை சந்தித்துப் பேசினார்.

முற்பகல் 11-30 மணிக்கு இந்திரா காந்தியை டாக்டர் நாவலர் சந்தித்து உரையாடினார்.

பிரதமரின் ஆலோசகர் ஜி. பார்த்தசாரதி. பிரதமரின் செயலாளர் அலெக்சாண்டர் ஆகியோரையும் சந்தித்துபேசினார்.

உள்துறை அமைச்சர் வெங்கடசுப்பையாவையும் டாக்டர் நாவலர் சந்தித்துப் பேசினார்.

இன்று மாலை திட்ட இலாகா அமைச்சர்பி. சி. சேத்தியை சந்தித்துப் பேசுகிறார்.

நிதி அமைச்சர்டாக்டர் நாவலர் நாளையும் டெல்லியில் தங்கி இருப்பார்.

(முன்வந்த செய்தி 2-ம் பக்கம்)

### தீகுளித்தகழகதோழர்களை அமைச்சர்கள் உடல் நலம் விசாரித்தனர்

மதுரை, அக். 26— முதல்வர்புரட்சித்தலைவர் உடல்நிலைபற்றிதவறான தகவலை கேள்வியுற்ற மதுரை கழகத்தோழர்கள் பாலகிருஷ்ணன், பாண்டியன் தீக்குளித்து உயிருக்கு ஆபத்தான நிலையில் மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டுள்ளனர் அதே போல் செல்வம் என்ற கழகத்தோழர் தன் உடலை பிளேடால அறுத்துக் கொண்டு மருத்துவ மனையில் அனுமதிக்கப் பட்டுள்ளார்.

இவர்களை அமைச்சர்கள், காளிமுத்து கே. கே. எஸ். எஸ். ஆர். ராமச்சந்திரன் மற்றும்சேடப்பட்டி முத்தையா. மதுரை. எஸ். பாண்டியன். பால குரு. நவனீதகிருஷ்ணன் ஆகியோரும் மற்றும்கழக முன்னணியினரும் பார்த்து ஆறுதல்கூறினர்.

### பின்னி ஆலை: திறப்பது எப்போது? அமைச்சர் ராகவானந்தம் பேட்டி

சென்னை, அக். 26— அமைச்சர் ராகவானந்தம் நிருபர்களிடம் கூறியதாவது:-

சென்னையில் உள்ள பி. அண்ட் சி மில் திறப்பதற்கு மத்திய அரசின் அனுமதி எதிர்பார்க்கப் படுகிறது.

தமிழக அரசின் சார்பில் அறிக்கைகள் 15 தினங்களுக்கு முன்பு மத்திய அரசுக்கு அனுப்பப்பட்டு விட்டது.

இவ்வாறு அமைச்சர் ராகவானந்தம்கூறினார்.

பி. அண்ட். சி. ஆலையில் 8 ஆயிரம் தொழிலாளர் பணியாற்றுகிறார்கள்.

இந்த ஆலையைத் திறக்க தமிழக அரசு பெருமுயற்சிகளை மேற்கொண்டுள்ளது.

இது தொடர்பாக அமைச்சர் ராகவானந்தம் கூறியதாவது:

தொழிற்சங்க தலைவர்களுடன் தமிழக அரசு பேசிய பின்னர் அவர்களின் கருத்தினை மத்திய அரசுக்கு தெரிவித்துள்ளோம்.

தொழிற் சங்கத் தலைவர்கள் ஆலையை திறப்பதற்கு வேண்டிய நிபந்தனைகளை ஒப்புக் கொண்டுள்ளனர்.

இவ்வாறு அமைச்சர் ராகவானந்தம் கூறினார்.

## முதல்வர் உடல்நிலை: ஜனாதிபதி விசாரித்தார்

சென்னை, அக். 26— அப்பலோ மருத்துவ மனையில சிகிச்சைபெற்று வரும் முதலவர் புரட்சித் தலைவரின் உடல நிலை குறித்து வெளிநாட்டு சுற்றுப் பயணததில் இருக்கும் ஜனாதிபதி ஜைல்சிங் டெலிபோன் மூலம் தொடர்பு கொண்டு விசாரிததார்.

நேற்றிரவு7-30மணிக்கு ஜனாதிபதி ஜைல்சிங் மொரீஸ் தீவிலிருந்து அப்பலோ மருத்துவமனை தலைமை டாக்டர் பிரதாப் சி. ரெட்டியுடன் டெலிபோனில் தொடர்பு கொண்டு முதல்வர் புரட்சித் தலைவரின் உடல்நிலைபற்றிகேட்டார். முதலவருக்கு அளிக்கப் படும் சிகிச்சைகள் பற்றியும் கேட்டறிந்த ஜனாதிபதி ஜைல்சிங் முதல்வருக்கு அளிக்கப் படும் சிகிச்சைகளுக்காக பாராட்டு தெரிவித்தார்.

முதல்வர் விரைவில் குணமடைய வேண்டும் என்று பிரார்த்தனை செய்வதாகவும் மறுபடியும் டெலிபோனில் தொடர்பு கொளவதாக ஜனாதிபதி ஜைல்சிங் கூறியதாகவும் பிரதாப் சி. ரெட்டி நிருபர்களிடம் தெரிவித்தார்.

### முதல்வர் பூரண நலம்பெற

## ஏழை குழந்தைகட்கு உணவு உடை

சென்னை, அக். 26 முதல்வர் புரட்சித் தலைவர் பூரணநலம்பெற ஹால்ஸ் ரோடில் உள்ள கருணை இல்லத்தில்ஏழைக் குழந்தைகட்கு உணவு உடைகளை அமைச்சர் கே. ஏ. கே. வழங்குகிறார்.

ஏ. வி. எம். ராஜன், புஷ்பலதா உணவு உடைகளை அளித்துள்ளனர்.

இவைகளை அமைச்சர் கே.ஏ கே. இன்று மாலை 4.30 மணிக்கு வழங்குகிறார்.

## முதல்வர் பூரண நலம் பெற கவிஞர்கள் கவிதாவேள்வி

சென்னை, அக். 26- முதல்வர் புரட்சித் தலைவர் பூரணநலம்பெற கவிஞர்கள கவிதா வேள்விகளை நடத்தும்படி தமிழகக் கவிஞர் பேரவை அறிக்கை வெளியிட்டுள்ளது.

தமிழகக் கவிஞர் பேரவையின் செயற்குழு மு. மேத்தா தலைமையில கூடியது.

செயற்குழுவில் நிறைவேற்றப்பட்ட தீர்மான விவரம் வருமாறு:-

தமிழக முதல்வர் உடல் நலமின்றிஇருக்கும்செய்தி தமிழகக் கவிஞர்களின் இதயத்தைப்பேரிடியாய்த் தாக்கியுள்ளது.

அந்த மக்கள் தலைவன் பூரணகுணம்பெற்றுவளமும் நலமும் சூழ வாழ் வாங்கு வாழ வேண்டுமென்று நித்தும், நித்தம் நெஞ்சைப் பிழிந்து கொண்டிருக்கும் எங்கள் நினைவுகள், கவிதா வேள்வி நடத்துகின்றன.

உள்ளங்கவர்ந்த அந்தத் தலைவன் விரைவில் உடல் நலம்பெறவேண்டும் என்று எல்லாம் வல்ல இயற்கையைக் கவிதை இதயங்களால் கைதொழுது வேண்டுகின்றோம்.

"தமிழக முதல்வர் விரைவில் நலம் பெறக் கவிஞர்களின் இதயங்களெல்லாம் கவிதாவேள்வி நடத்தட்டும்," என்று தமிழ்நாட்டிலுள்ள தமிழகக் கவிஞர் பேரவையின் கிளைகளையும் மற்றும் தமிழகத்திலுள்ள அனைத்துக் கவிஞர்களையும் செயற்குழு கேட்டுக் கொண்டுள்ளது.

இவ்வாறு தீர்மானத்தில் கூறப் பட்டுள்ளது.

புரட்சித்தலைவர் பூரண நலம்பெற

# அண்ணா துயிலுமிடத்தில் கோடம்பாக்கம் குமார் 1 நாள் உண்ணாநோன்பு

சென்னை, அக். 26- முதல்வர் புரட்சித்தலைவர் உடல் நலம் பெற கோடம்பாக்கம் குமார் இம்மாதம் 30ம் தேதி யன்று அண்ணா துயிலுமிடத்தில் ஒரு நாள் உண்ணா நோன்பு - மவுன விரதம் இருக்கிறார்.

முதல்வர் புரட்சித் தலைவர் பூரண நலம்பெற வேண்டி இந்து-கிருத்துவ இஸ்லாமிய சமயத்தினர் தத்தம் ஆலயங்களில் வழிபாடு செய்து பிரார்த்திக்கின்றனர்.

முதல்வர் பூரண நலம் பெற ஆலயங்களில் பூஜை வழிபாடு நடந்து வருகிறது.

கழகத் தோழர்கள் பல இடங்களில் உண்ணா நோன்பு இருந்து பிரார்த்தனை செய்து வருகின்றனர்.

கழகப் பேச்சாளர் கோடம்பாக்கம் குமார் அண்ணா நினைவாலயத்தில் அண்ணா துயில் கொண்டு இருக்கும் இடத்தில் உண்ணாநோன்பு இருக்கப் போவதாக அறிவித்துள்ளார்.

"எங்கள் இதயத்தில் இருந்த இதயக்கனியாம் புரட்சித் தலைவர் பூரண நலம் பெற்று மக்களுக்கும் நாட்டுக்கும் பல்லாண்டு தொண்டாற்ற நீண்ட ஆயுளை அவருக்கு அருள் புரியுங்கள் என்று அமரர் அண்ணாவை வேண்டி உண்ணாநோன்பு இருக்கப்போகிறார்.

இம்மாதம் 30ம் தேதி காலை அண்ணா நினைவாலயத்தில் அண்ணா துயில் கொண்டுள்ள இடத்தில் கோடம்பாக்கம் குமார் உண்ணா நோன்பும் மவுன விரதமும் இருக்கிறார்.

அவருடன் சென்னை மாநகராட்சி முன்னாள் துணை மேயர் சடகோபன் மகன் நந்தனம் நம்பியும் உண்ணாநோன்பு இருப்பார் 30ம் தேதி காலை 6மணி முதல் 31ந் தேதி 6 மணி காலைவரை இவர்கள் உண்ணா நோன்பு மவுன விரதமும் இருப்பதாக அறிவித்துள்ளனர்.

## மாங்கல்ய காணிக்கை

தமிழக முதல்வர் புரட்சித் தலைவர் விரைவில் நலம் பெற வேண்டும் என்பதற்காக தலைமைக்கழக பேச்சாளர் தாம்பரம் லட்சுமி முத்து அவரது கணவர் பி. கே. காளி முத்து கோயில்களில் பிரார்த்தனை செய்து வருகின்றனர்.

முதல்வர் புரட்சித் தலைவர் நலம்பெற திருச்செந்தூர் முருகன் கோவிலில் மாங்கல்யம்காணிக்கை அளிப்பதாக வேண்டிக் கொண்டனர்.

## காட்பாடி

காட்பாடியில் உள்ள வரதராஜ பெருமாள் கோவிலில் முதல்வர் புரட்சித்தலைவர் நலம் பெறவேண்டி மெட்டுகுளம் கோவிந்தரெட்டி 'ராஜேந்திரன்' லிங்கன். சோமு. ஆறுமுகம் நடராஜ்.ரவி. கோபால் மற்றும் ஏராளமானோர் கலந்து கொண்டு விசேஷ பூஜை நடத்தினர்.

## கீழையூர்

தமிழக முதல்வர் புரட்சித் தலைவர் விரைவில் நலம் பெற்று வர வேண்டி என்று கீழையூர் காளியம்மன் கோவிலில் 101 பெண்கள் குத்து விளக்கு பூஜை நடத்தினர் என்று கைலாசம் தெரிவித்துள்ளார்.

## பட்ரோடு

சென்னை பட்ரோடு பகுதி மக்கள் மற்றும் கழகத்தினர் காசி விஸ்வநாதர் ஆலயத்தில் புரட்சித் தலைவர் நலம்பெற விசேஷ பூஜை நடத்தினர். வழிபாட்டின் ஏற்பாடுகளை அறங்காவலர் ஏ. வி. அன்பழகன் செய்திருந்தார்.

## 145-வது வட்டம்

புரட்சித் தலைவர் பூரண நலமடைய வேண்டி, 145 வதுவட்டம் எம். ஜி. ஆர். மன்றம் ஜாபர்கான்பேட்டையில் ஆயிரம் பேருக்கு அன்னதானம் வழங்கப்பட்டது. 145வது வட்ட செயலாளர் எஸ். தனசேகரன் மற்றும் மன்ற உறுப்பினர்கள் கலந்து கொண்டனர்.

## 4-வதுவட்டம்

புரட்சித்தலைவர்பூரண நலமடைய வேண்டி டாக்டர் ராதாகிருஷ்ணன் நகர் தொகுதி 4-வது வட்டம் துணை செயலாளர் த. கோவிந்தசாமி தலைமையில் நாகூரான் தோட்டம் தேவி பெரிய பாளையத்தம்மன் ஆலயத்தில் விசேஷ பூஜை நடத்தப்பட்டது பூஜையில் கழக தோழர்கள் மகளிர் பிரிவினர் மற்றும் ஏராளமான பொது மக்களும் கலந்து கொண்டனர்.

## சிவகங்கை

முதல்வர் புரட்சித் தலைவர் பூரண நலம் பெற சிவகங்கை வட்டம் கீழப் பூங்கொடி கிராமத்தில் எம்.ஜி.ஆர். இளைஞர் அணியின் சார்பாக மீனாட்சி சுந்தரேஸ்வரர், மாரியம்மன் கோயில், பிள்ளையார், மிளகாய் சுவாமி கோவில் ஆகிய கோவில்களில் பிரார்த்தனைகள் நடைபெற்றது. இதில் மன்ற மறவர்களும், பொது மக்கள் பலரும் கலந்து கொண்டு பிரார்த்தித்தனர். இதற்கான ஏற்பாடுகளை செயலாளர் சா. பாலசுப்பிரமணியனும் மற்றும் கழகத்தவரும் செய்திருந்தனர்.

## 46-வதுவட்டம்

முதல்வர் புரட்சித் தலைவர் உடல் நலம்பெற வேண்டி, சென்னை 46-வது வட்டம் துறைமுகப்பகுதி சார்பாக பாஷியகாரலு நாயுடு தெருவிலுள்ள வெங்கடாசலபதி பெருமாள் கோயிலில் 25-ந் தேதி விசேஷ பிரார்த்தனை நடைபெற்றது. இதில் ஆர். எஸ். டி. சாமிநாதன், எம்.வி.இராமன் ராஜேஸ்வரி ராமன், எம். பி. ஆனந்தன். தட்சணாமூர்த்தி, செகன்னாதன் வி. சுகுமார், எஸ். பி. டி. விஜயன், பாலசுந்தரம், அண்ணாதாசன், ஆர். விஜயன் டி.கே. கணேசன் உள்ளிட்ட பல கழகத் தோழர்களும் பொது மக்களும்பங்கேற்றனர்.

## சிந்தாதிரிபேட்டை

புரட்சித் தலைவர் பூரண நலமடைந்து மக்களுக்கு நல்ல பல சேவைகளை செய்ய வேண்டும் என்று சிந்தாதிரிப்பேட்டை ஸ்ரீ முக்கியம்மன் ஆலயத்தில்சிறப்பு வழிபாடு நடத்தப்பட்டது. வழிபாட்டில் எம். ஜி ஆர். ரசிகப் பெருமக்கள் வேலாயுதம் ராஜி கோபால் உள்பட பொது மக்கள் ஏராளமானோர் கலந்து கொண்டனர்.

## பட்டாளம்

சென்னை பட்டாளம் அப்பாசாமிபிள்ளை தெரு வாசிகளால் இன்றுமாலை 7மணியளவில் பட்டாளம் ஸ்ரீஎல்லையம்மன் ஆலயத்தில் வி. பி. ராஜ், ஆர். மோகன், கே. வடுகாம்பாள், ஏ வேணுகோபால் ஆகியோர் முன்னிலையில் விசேஷ பூஜையும், பிரார்த்தனையும் நடைபெறுகிறது.

## படஅதிபர்

முதல்வர் புரட்சித் தலைவர் விரைவில் நலம் பெற்று திரும்ப வேண்டும் என்பதற்காக ஏ. சி. எஸ் பிச்சர்ஸ் ஏ. சந்திரசேகரும் அவரது துணைவியார் நண்பர்கள் சேர்ந்து மயிலை கபாலீஸ்வார் கோவிலில் உள்ள நவகிரகங்களுக்கு விசேஷ பூஜை நடத்தினர்.

7-வது ஐந்தாண்டுத் திட்டம் குறித்து விவாதிக்க

# டாக்டர் நாவலர் டெல்லி பயணம்: பிரதமரை சந்திக்கிறார்

சென்னை, அக். 26- 7வது ஐந்தாண்டு திட்டத்திற்கு நிதி ஆதாரங்களை திரட்டுவது குறித்து மைய அரசுடன் விவாதிக்க நிதி அமைச்சர் நாவலர் நேற்று இரவு டெல்லிக்கு பயணமானார்.

நிதியமைச்சர் நாவலர் நேற்று இரவு விமானம் மூலம் டெல்லிக்கு பயணமானார். டெல்லியில் நிதி அமைச்சர் நாவலர் பிரதமரை சந்தித்து முதல்வரின் உடல் நிலை குறித்தும் விளக்கி கூறுகிறார் டெல்லி செல்லுமுன் நிதியமைச்சர் நாவலர் நிருபர்களிடம் கூறியதாவது:-

7-வது ஐந்தாண்டு திட்டத்திற்கு நிதி ஆதாரங்களை திரட்டுவது குறித்து ஒவ்வொரு மாநில நிதி அமைச்சர்களுடனும் அதிகாரிகளுடனும் மத்திய அரசு ஆலோசனை நடத்துகிறது அப்போது தமிழகம் பற்றிய ஆலோசனை டெல்லியில் 2 நாட்கள் நடக்கிறது அதில் பங்கு கொள்ள டெல்லி செல்கிறேன். தமிழக அதிகாரிகள் சிலர் ஏற்கனவே டெல்லி சென்றுவிட்டனர் டெல்லியில் இக் கூட்டத்தில் கலந்து கொள்வதுடன் பிரதமர் இந்திராவை சந்திக்க அவரிடம் நேரம் கேட்டிருக்கிறேன் அவரிடம் முதல்வர் புரட்சித் தலைவரின் உடல் நிலை குறித்தும் கூறுவேன், பொதுத் தேர்தல் பற்றி பேசும் பிரச்சினை எழவில்லை ஏனென்றால் பாராளுமன்ற தேர்தல் எப்போது நடைபெறும் என்று மத்திய அரசு இன்னும் திட்டவட்டமாக அறிவிக்கவில்லை. அந்த தேதி அறிவிக்கப்பட்ட பிறகு தான் தேர்தல் பற்றி பேசக் கூடிய நிலை ஏற்படும்.

இவ்வாறு நிதியமைச்சர் டாக்டர் நாவலர் கூறினார்.

விசைபடகில் கடத்தல் பொருட்கள

## துப்பாக்கி சூடு: ஆசாமிக்கு காயம்

சென்னை, அக். 26— விசைப்படகு ஒன்றில் வெளிநாட்டுப் பொருட்கள் கடத்தி செல்லப்படுவதாக வந்த தகவலை அடுத்து சுங்க இலாகா அதிகாரிகள் அந்தப்படகை கடலில் துரத்திச்சென்று படகை நிறுத்துமாறு எச்சரித்தனர் ஆனாலும் படகில் இருந்த மரிய செல்வம் (வயது 21) என்ற ஆசாமி படகை நிறுத்தாததால் சுங்க இலாகா அதிகாரிகள் சுட்டனர்.

இதில் மரிய செல்வத்திற்கு குண்டுக் காயம் பட்டு சென்னை பொது மருத்துவ மனையில் அனுமதிக்கப்பட்டுள்ளார்.

கடத்தல் பொருட்கள் இருந்த படகு பறிமுதல் செய்யப்பட்டுள்ளது.

கர்நாடகத்தில் இருந்து

# காவிரியில் நாற்பது டி.எம்.சி.தண்ணீர் பெற அரசு தீவிர முயற்சி

அமைச்சர் வீராசாமி பேட்டி

சென்னை, அக். 26- கர்நாடகத்தில் இருந்து காவிரியில் 40. டி.எம்.சி தண்ணீர் பெற அரசு தீவிர முயற்சிகளை மேற்கொண்டிருப்பதாக அமைச்சர் வீராசாமி கூறினார்

தமிழக உணவு அமைச்சர் வீராசாமி நிருபர்களிடம் கூறியதாவது:-

கர்நாடகத்திலிருந்து காவிரி நீர் நமக்கு தர வேண்டியதை பெறுவதற்காக சில மாதங்களுக்கு முன்பு முதல்வர் புரட்சித் தலைவர் கடிதம் எழுதி இருக்கிறார்.

கர்நாடக மாநிலத்தில் அவர்களின் தேவைக்கு மேல் தண்ணீர் இருக்கிறது. நமது உரிமையை விட மனிதாபிமான அடிப்படையில் தண்ணீர் தர வேண்டும்.

முதல்வர் புரட்சித் தலைவர் எழுதிய கடிதத்தின் அடிப்படையில் 40 டி. எம்.சி தண்ணீரை வலியுறுத்திப்பெறஏற்பாடு நடக்கிறது, தமிழக நீர்பாசனத்துறை அமைச்சர் இதுபற்றி கடிதம் எழுதி இருக்கிறார்.

மேட்டூரில் தேவையான தண்ணீர் இருக்கிறது எனவே விவசாயிகள் அச்சப்படத் தேவையில்லை.

இப்போது குறுவையில் சுமார் 50 சதவிகிதம் அறுவடை முடிந்திருக்கிறது, தஞ்சையில் 2 லட்சம் டன் நெல்லும் மற்ற இடங்களில்60ஆயிரம்டன் நெல்லும் கொள் முதல் செய்யப்பட்டுள்ளது.

சுமார் 7 லட்சம் டன் கையிருப்பு வைக்க கிடங்குகள் இருக்கின்றன.

இதுவரை கொள்முதல் செய்யப்பட்டதில் கால் பங்கு லெவி மூலமும், மீதி விவசாயிகள் நேரடி அரசு கொள்முதல் நிலையங்களில் கொடுத்ததும் ஆகும்.

குவிண்டாலுக்கு 15 ரூபாயை அரசு உற்பத்தி போனசாக கொடுத்ததில் விவசாயிகள் மகிழ்ச்சி அடைந்துள்ளனர். விவசாயிகள் அரசுடன் உதவும் நல்லெண்ணம் வைத்திருக்கிறார்கள்.

இந்த குறுவை அறுவடையில் சுமார் 7 லட்சம் டன் நெல் கொள்முதலாகும் என எதிர் பார்க்கிறோம்.

இப்போதே போதுமான அளவு உணவு பொருள் கையிருப்பு இருக்கிறது. உணவுப் பஞ்சம் என்ற பேச்சுக்கே இடமில்லை.

மத்திய அரசின்தொகுப்புக்கு ஒரு லட்சம் டன் அரிசி தருவதாக 6 மாதத்திற்கு முன்பே தெரியப்படுத்திவிட்டோம். அதன் பிறகும் இரண்டு மூன்று முறை நினைவு படுத்தியிருக்கிறோம்.

சில ரேஷன் கடைகளில் அரிசி தரமானதாக இல்லை என்று எனக்கு கடிதம் வந்திருக்கிறது. இதுபற்றி நடவடிக்கை மேற்கொள்ளப்படும் மக்களுக்கு தரமான நல்ல அரிசி தர வேண்டும். என்பதே அரசின் நோக்கம்.

சத்துணவு திட்டத்திற்கும் குடும்ப அட்டைக்கு மாதம் 20 கிலோ அரிசி வழங்குவதற்கும் ஒரு லட்சத்து 25 ஆயிரம் டன் அரிசி தேவைப்படுகிறது.

தமிழகத்தில் அரிசி பஞ்சம் என்பதற்கு இடமே இல்லை.

இவ்வாறு அமைச்சர் வீராசாமி தெரிவித்தார்.

# ப. உ. ச. கடிதம்

(முதல் பக்கத் தொடர்ச்சி)

**எந்தக்கட்சிக்கும் இங்குள்ள எவரும் போக வேண்டிய அவசியமோ' அவல நிலையோ தோன்றவில்லை· தோன்றவும் தோன்றாது!**

இந்திரா காங்கிரசோடு நமது கழகத்திற்கு ஏற்பட்டுள்ள உறவைக் கெடுக்க வதந்திகளைக் கிளப்புகின்றனர்!

1980-ல் 'நேருவின் மகளே வா' என்று வெண் சாமரம் வீசிய வீரர் இன்று தமிழ் மண்ணின் தரத்தைப் பற்றியும், இந்திரா அம்மையாருக்கு இடந்தரக் கூடாதென்றும் கூறுகிறார்! தான் செய்ததையும், சொன்னதையும் மூடி மறைத்து புது காரணங்கள் கூறுவதில் திறமை வாய்ந்தவர்! இவரையே தோற்கடிக்கும் வகையில் அந்தப் பெண் நிருபர் எழுதியுள்ளார்! படிக்கவும் அசிங்கமாக உள்ளது!

**நமது நிலையினைத் தெளிவுபடுத்த விரும்புகிறேன்· "தேர்தல் கூட்டு" தான் அறிஞர் அண்ணா கற்றுத் தந்தது! புரட்சித்தலைவர் கையாள்வது!**

1980-ம் ஆண்டுத் தேர்தலில் 'கூட்டாட்சிக்கே' சென்று எப்படியாவதுதான் முதல்வராக ஆனால் போதும் என்று முனைந்தவர்தான் தி. மு. க. தலைவர்! இவர் தனக்கு பதவி ஆசையே இல்லாதது போலவும் கொள்கையிலேயே தான் குறியாக இருப்பதாகவும் கூறுவது வேடிக்கையாக உள்ளது!

## தனக்கொரு நீதி, பிறருக்கு ஒருநீதியா? நினைப்பது குற்றம்! வழங்குவது கண்டிக்கத்தக்கது!

நாவலர், பண்ருட்டி, மாதவன், இராசாராம், சத்தியவாணிமுத்து அம்மையார், இராசாங்கம், எஸ். எஸ். ஆர், ஆலடி அருணா எனக்கு எல்லாம் பதவி சுகம் இவர் தந்ததாகக் கூறுவது எவ்வளவு பைத்தியக்காரத்தனம்! நாங்களும்சேர்ந்ததால்தான் இவர் முதல்வராக நீடித்தார் என்பதை மறந்து விட்டார்!

அன்புள்ள,

ப. உ. ச.

முதல்வர்பூரண குணமடைய

# ஓட்டல் தொழிலாளர் பிரார்த்தனை

சென்னை மாவட்ட அண்ணா ஓட்டல்தொழிலாளர்கள் சங்க சார்பில் சந்திரன் தலைமையில் மாங்காடு கோவிலுக்கு 50 க்கும் மேற்பட்டோர் பாதயாத்திரையாக சென்றனர்.

## 136- வது வட்டம்

சென்னை 136-வது வட்டக் கழகம் சார்பிலும் இந்திராகாந்தி இளைஞர் நற்பணி மன்ற சார்பிலும் அம்மன் கோவிலிலும். விநாயகர் கோவிலிலும் வழிபாடு நடந்தது.

புரட்சித்தலைவர் பூரண குணமடைய

## மயிலையில் பிரார்த்தனை

128 வது வட்டம் மயிலையில் இன்று மாலை எங்க வீட்டுப்பிள்ளை தமிழக முதல்வர் எங்கள் இதயதெய்வம் பூரண குணமடைய வேண்டி கபாலித்தோட்டம் எல். எம். பிளாக்கில் அமர்ந்திருக்கும் ஸ்ரீபாலமுருகன் சன்னதியில் வி. எஸ். வேணு, கே. எட்டி, ஆர். மோகன், கு. சின்னப்பா, இரா. பலராமன், லஸ் என். திருநாவுக்கரசு முன்னிலையில் சுமார் 6 மணியளவில் அனைத்து கட்சி சார்பில் பொது வழிபாடு நடைபெறுகிறது.

## திருவள்ளுவர் போக்குவரத்து கழகம்

சென்னையில் உள்ள திருவள்ளுவர்போக்குவரத்து கழகத்தின் தொழிலாளர்கள் இன்று காலை அண்ணா சிலை அருகே உண்ணா நோன்பு இருந்தனர்.

முதல்வர் புரட்சித் தலைவர் விரைவில் நலம்பெற்று திரும்பவேண்டும் என்று 150- க்கும் மேற்பட்ட திருவள்ளுவர் போக்குவரத்துக் கழகத் தொழிலாளர்கள்உண்ணா நோன்பு இருந்தனர்.

## புதுக்கோட்டை

விருதுநகர் தொகுதி புதுக்கோட்டை கிராம கழகம் மற்றும் இ. காங்கிரஸ் ஜனதாவைசேர்ந்த உறுப்பினர்கள் உள்பட அனைத்து பொது மக்களும் கிராமத்தில் உள்ள கோயில்களில் புரட்சித் தலைவர் பூரண நலமடைய சிறப்பு வழிபாடு நடத்தப்பட்டது

முதல்வர் நலம் பெற

## 137-வதுவட்டம் பிரார்த்தனை

முதல்வர் விரைவில் நலம் பெற, 137-வது வட்டக் கழக சார்பில் அடையாறு பணிமனை எதிரில் உள்ள பெரிய பாளையத்தம்மன் ஆலயத்தில் பிரார்த்தனை நடந்தது. இதில் அமைச்சர் சவுந்திரராசன், டி. கே. கபாலி எம். எல். ஏ, பாக்கர் சுப்பிரமணியம், மயிலை நரசிம்மன், எம். கே. பாலன் மயிலைஜெகன் மாணிக்கம், ஆனந்தன், தட்சிணாமூர்த்தி, குமரவேலு, ஆறுமுகம்வட்டச் செயலாளர் இரா மூர்த்தி மற்றும் கழக முன்னணியினர் பொது மக்கள் பங்கேற்றனர்.

# முதல்வரின் இலாகா நாவலர் கவனிப்பார்: ஆளுநர் அறிவிப்பு

சென்னை. அக். 26- முதல்வர் உடல் நலம்பெறும் வரையில் அவரது இலாகாக்களை நிதியமைச்சர் டாக்டர் நாவலர் கவனிப்பார். இதற்கான அறிவிப்பை ஆளுநர் குரானா நேற்று வெளியிட்டார்.

முதல்வர் புரட்சித் தலைவர் மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டு சிகிச்சைபெற்றுவருவதால் அவர் உடல் நலம் பெற்று வரும்வரை அவரது இலாக்காக்களான பொதுநிர்வாகம்(சட்டம், ஒழுங்கு) மது விலக்கு, ஐ. ஏ. எஸ், ஐ. பி.எஸ், அதிகாரிகள், திட்டம் ஆகிய இலாக்காக்களை நிதியமைச்சர் டாக்டர் நாவலர் கூடுதல் பொறுப்பாக சேர்த்துகவனிப்பார் என்று ஆளுநர் குரானா நேற்று அறிவித்தார்.

முதல்வர் சிகிச்சை பெற்று வருவதால் அவர் குணம் அடையும் காலம் வரை இந்த ஏற்பாடு செய்யப்பட்டு இருப்பதாக கவர்னரின் அறிவிப்பில் கூறப்பட்டு உள்ளது.

அமைச்சரவை கூட்டங்களுக்கும் நிதியமைச்சர் டாக்டர் நாவலர் தலைமை தாங்குவார் என்றும் அந்த அறிவிப்பில் தெரிவிக்கப்பட்டு இருக்கிறது.


## புதுமை தமிழ் நாளேட்டுக்கு விற்பனையாளர்கள் தேவை

இந்தியாவின் பயிர் வளர்ப்பு துறையில் குறிப்பிடத்தக்க சாதனைகள் படைத்து வரும் கோரமண்டல் இண்டாக் நிறுவனத்தை யாவரும் அறிவோம். 1972ம் ஆண்டு துவங்கப்பட்ட இந்நிறுவனம் இன்று 20 நிறுவனங்களாக பரிணமித்து, விவசாய இடுபொருட்கள் தயாரிப்பில் பாரதத்தில் முதலிடம் வகிக்கிறது.

விவசாய துறை மட்டுமன்றி பல்வேறு துறைகளிலும் வெற்றி வாகை சூடி வரும் இந்த நிறுவனம், பத்திரிக்கை உலகில் புதிய சகாப்தம்படைக்க திட்டமிட்டு கோரமண்டல் பதிப்பகத்தை துவக்கியுள்ளது.

இப்பதிப்பகத்திலிருந்து காலை-நாளிதழையும் அதனை தொடர்ந்து வார-மாத இதழ்களையும் ஆப் - செட் இயந்திரத்தில் அச்சிட்டு வெளியிட உள்ளது. முதல் கட்டமாக அடுத்த மாதம் முதல் சென்னை-மதுரையிலிருந்தும், இரண்டாம் கட்டமாக ஈரோடு - திருச்சியிலிருந்தும், மூன்றாம் கட்டமாக திருநெல்வேலி-தஞ்சையிலிருந்தும் வெளிவர உள்ள இப்புதிய தமிழ் காலை நாளேட்டை தனிக்கவனம் செலுத்தி விற்பனை செய்ய தமிழகமெங்கும் விற்பனையாளர்கள் தேவை.

முன் பணம் கட்டக்கூடிய, அனுபவமும்-ஆர்வமும் உடைய விற்பனையாளர்கள், தேவைப்படும் பிரதிகளின் எண்ணிக்கை விவரத்துடன் உடன் தொடர்பு கொள்ளவும்.

கடின உழைப்பும், தன்னம்பிக்கையும் மிக்க வேலையற்ற பட்டதாரிகளின் மனுக்களும் பரிசீலிக்கப்படும்.

தொடர்பு கொள்ள முகவரி:
விநியோக நிர்வாகி,
கோரமண்டல் பதிப்பகம்,
62-ஸ்பர் டாங்க் சாலை,
சேத்துப்பட்டு,
சென்னை-600 031


Edited And Published by K. RAVINDRAN on Behalf of Thangamani Publications And Printed by All India Anna D. M. K. Perarignar AnnA Trust Press at 34, Nelson Manickam Road, Madras—600 029.

# தமிழகத்தின் காவல் தெய்வம் புரட்சித்தலைவர் பூரண நலம் பெற நாடெங்கும் பிரார்த்தனைகள்

சென்னை, அக்.26- தமிழகத்தின் காவல் தெய்வமாம் முதல்வர் புரட்சித்தலைவர் பூரண நலம் பெற தமிழகம் முழுவதும் சர்வசமய மக்களும் பிரார்த்தனைகளையும் வழிபாடுகளையும் தொடர்ந்து நடத்தி வருகின்றனர்.

## ஆரணி

ஆரணி கழகத் தோழர்களும் பொதுமக்களும் முதல்வர் புரட்சித் தலைவர் நலம் பெற வேண்டும் என்று நெசல் புதுப்பட்டி, மாமண்டூர் இரும்பேடு ஆகிய கிராமங்கள் உட்பட 22 கிராமங்களில் 107 கோவில்களில் விசேஷபூஜைகளும் பிரார்த்தனையும் நடைபெற்றன என்று சின்னக் குழந்தை தெரிவித்தார்.

ஆரணி கொசப்பாளையத்தில் உள்ள முத்து மாரியம்மன் கோவிலில் முன்னாள் எம் எல் ஏ அர்ச்சுனன், படைக்கலை சண்முகம் ஆகியோர் முதல்வர் புரட்சித்தலைவர் நலம் பெற சிறப்பு வழிபாடு நடத்தினர். அப்போது 75 சுமங்கலிகளுக்கு மங்கல நாண் அளித்தனர். 200 பேர்களுக்கு உணவு வழங்கினர்.

## இந்திரா காங்கிரஸ்

ஆரணி 23 வது வட்டம் இந்திரா காங்கிரஸ் சார்பில் முதல்வர் புரட்சித் தலைவர் விரைவில் குணமடைய வேண்டும் என்று கொசப்பாளையம் வினை தீர்க்கும் முத்து மாரியம்மன் கோவிலில் டி. யு. ஜே. ராஜாமாடி, ஏ. மாரி முத்து ஆகியோர் விசேஷ பூஜை நடத்தினர்

## கோவை

கோவைசித்தநாயக்கன்பாளையம் மாகாளியம்மன் கோவிலில் எம். ஜி. ஆர். நாடக மன்றத்தின் சார்பிலும் கிளை கழகம் சார்பிலும் கழகத் தோழர்களும் பொதுமக்களும் சேர்ந்து விசேஷ பூஜை நடத்தினர்.

வெள்ளியங்கிரிமலையில் ஆறாவதுமலை மீது ஓடிக் கொண்டிருக்கும் ஆண்டி சுனையிலிருந்து சி. பொ. கலைமணி தீர்த்தம் கொண்டு வந்து அபிஷேகம் செய்தார்.

## சாலிகிராமம்

சென்னை சாலிகிராமத்தில் ஹமீதியா ஜாமியா பள்ளி வாசலில் முதல்வர் புரட்சித் தலைவர் முழு சுகம் பெற விசேஷ பிரார்த்தனை நடைபெற்றது.

## திருவாரூர்

திருவாரூரிலிருந்து கழகத்தினரும் பொது மக்களும் 200 பேர் 13 கிலோ மீட்டர் தூரம் நடந்து சென்று எண்கண் சுப்பிரமணிய சுவாமி கோவிலிலும் மருதம் பட்டிணம் காமாட்சி மாரியம்மன் கோவிலிலும் திருவாரூர் தங்கமுத்து மாரியம்மன் கோவிலிலும் சிறப்பு வழிபாடுகள் நடத்தினர், வழிபாட்டில் மு, அப்துல்லா, எம். போஸ் ஆர். முத்து கே. தர்மராஜ், கே. கணேசன் சுந்தரவிளாகம் நாகலிங்கம், ராஜசேகர், காரியாங்குடி பஞ்சநாதன். வைரக்கண்ணு ஆகியோர் கலந்து கொண்டனர்.

## மசினகுடி

நீலகிரியில் உள்ள மசினகுடியில் முதல்வர் புரட்சி தலைவர் நலம் பெற மசினையம்மன், துர்கியம்மன் கோவில்கள் மாதா கோயில், ஜாமிஆ மசூதி ஜலீர்சுல்தான் தர்கா ஆகிய இடங்களில் கழகத்தினரும் பொது மக்களும் பொது வழிபாடு செய்தனர். பின்னர் மோயார் சிக்கம்மாள் கோவிலிலும் வழிபாடு நடைபெற்றது

## ஜெகஜீவன் காங்கிரஸ்

தமிழ்நாடு ஜெகஜீவன் ராம் காங்கிரஸ் செயற்குழு கூட்டத்தில் முதல்வர் புரட்சித் தலைவர் விரைவில் குணமடைந்து பல்லாண்டு வாழவேண்டும் என்ற தீர்மானம் நிறைவேற்றப்பட்டதாக டாக்டர் ஏ. கே. ஜெய்னுதீன் தெரிவித்துள்ளார்.

## சேப்பாக்கம்

சென்னை 89-வது வட்டம் சேப்பாக்கத்தில் உள்ள இந்திரா காங்கிர சார் முத்துமாரியம்மன் கோயில் ஆதிபராசக்தி கோயில் ஆகியவற்றில் முதல்வர் புரட்சித்தலைவர் விரைவில் நலம் பெற விசேஷபூஜை செய்தனர்.

செல்லப்பிள்ளையார் கோவில் தெருவில் உள்ள பூர்ண விநாயகர் ஆலயம் மசூதி தெருவில் உள்ள நவசக்தி விநாயகர் ஆலயம், ஏ. வி. எம்- தெருவில் உள்ள சக்தி விநாயகர் ஆலயம் ஆகியவற்றில் கழகத்தினரும் பொது மக்களும் சிறப்பு வழிபாடு நடத்தினர்.

## கிறிஸ்தவர்கள் விசேஷ பிரார்த்தனை

முதல்வர் புரட்சித் தலைவர் பூரண சுகம் அடைய சென்னை திருவல்லிக்கேணி பெரிய தெருவில் உள்ள இந்திய தேவ திருச்சபையினர் (சர்ச் ஆப் காட்) சுவிசேஷக் சார்பில் பிரார்த்தித்தனர்.

பாஸ்டர் வி. ஏ. ஜார்ஜ் சர்வதேச கிராம சுவிசேஷக் குழுத்தலைவர் எஸ். டி. தேவசகாயம் அழைப்பின் எதிரொலி ஆசிரியர் எஸ் சாம்செல்வராஜ் ஆகியோர் சுவிசேஷ செய்திகளைக் கூறி பிரார்த்தனை செய்தனர் கிறிஸ்தவர்கள் உள்பட பொது மக்கள் பலரும் கலந்து கொண்டனர். சகோதரர் டி. ரிச்சார்ட் தம்பிராஜ் குழுவினர் இசை வாத்தியங்களுடன் பக்திப் பாடல்களை பாடினர்.

## சாயிநகர் நல்வாழ்வு சங்கத்தினர் பிரார்த்தனை

சென்னை விருகம்பாக்கம் சாயிநகர் குடியிருப்போர் நல்வாழ்வு சங்கத்தின் சார்பில் முதல்வர் புரட்சித் தலைவர் பூரண நலம்பெற பிரார்த்தனை நடத்தப்பட்டது.

வெங்கட்ராகவன் தலைமையில் கூடி பிரார்த்தனை செய்தனர்.

முதல்வர் விரைவில் பூரண நலம் பெறவும் பூரண ஆரோக்கியத்துடன் மக்களுக்கு நீண்டகாலம் சேவை செய்ய உடல் நலம் அருளும்படி வேண்டி பிரார்த்தனை செய்தனர்.

## பாப்பிரெட்டிபட்டி

தர்மபுரி மாவட்டம் பாப்பிரெட்டிபட்டி பேருந்து நிலையத்திலிருந்து கழக ஒன்றிய செயலாளர் ந. ஜெகநாதன் தலைமையில் மாவட்ட இளைஞர் அணிசெயலாளர் எம். ஜி. சேகர், நகர இளைஞர் அணி செயலாளர் ஆர். ராஜேந்திரன் ஆகியோர் முன்னிலையில் கழகத் தோழர்கள் வேல் முருகன் கோவிலில் புரட்சித் தலைவர் பூரண குணம் அடைய விசேஷ பிரார்த்தனை நடத்தப்பட்டது.

## சின்னமுனியன் வளவு

சேலம் மாவட்டம் கொங்கனாபுரம் ஒன்றியம் சின்ன முனியன் வளவில் உள்ள கோவில்களில் முதல்வர் புரட்சித் தலைவர் உடல் நலம் பெற விசேஷ அர்ச்சனையும் பிரார்த்தனையும் நடத்தப்பட்டது ஏராளமான கழகத்தோழர்களும் பொதுமக்களும் கலந்து கொண்டனர்.

## மேச்சேரி

நமது இதய தெய்வம் டாக்டர் புரட்சித்தலைவர் பூரண நலம் பெற வேண்டி சேலம் மாவட்டம் மேச்சேரியிலிருந்து கழகத் தோழர்கள் கர்நாடக மாநிலத்தில் உள்ள மாதேஸ்வரன் கோவிலுக்கு பாதயாத்திரை சென்று அபிசேக ஆராதனைகளும் விசேஷபூஜைகளும் நடத்தினார்கள்.

## ஆயுள்விருத்தி ஹோமம்

முதல்வர் டாக்டர் புரட்சித்தலைவர் பூரண குணம் அடைய வேண்டி சென்னை மயிலை சி. ஐ. டி. காலனியில் உள்ள ஸ்ரீ வரசித்தி விநாயகர் ஆலயத்தில் கணேச குருக்களால் ஆயுள்விருத்தி ஹோமமும் அபிஷேக ஆராதனையும் நடத்தப்பட்டது.

101 வது வட்ட பொருளாளர் எம். ஜி. சந்தானம் மக்கள் திலகம் எம். ஜி. ஆர் பொதுநல மன்ற தலைவர் எம். ஜெயராமன் உள்பட ஏராளமான கழக தோழர்களும், மன்ற மறவர்களும் வழிபாட்டில் கலந்து கொண்டு புரட்சித் தலைவர் சுகம் அடைய பிரார்த்தனை நடத்தினர்

## பிரார்த்தனை சைக்கிள் பேரணி

முதல்வர் புரட்சித் தலைவர் உடல் நலம்பெற வேண்டி 99- வது வட்ட கழகத் தோழர்கள் எம். ஜி கனகசபை, வே. துலுக்காணம், கே. நாகமணி, எஸ். மகேந்திரன், பி கனகசபை முன்னிலையில் ஏராளமான பொது மக்களும் கழகத் தோழர்கள் மற்றும் மன்ற மறவர்களும் லாயிட்ஸ் சாலையிலிருந்து வே. தமிழ்மணி தலைமையில் அருள்மிகு மேல் மருவத்தூர் ஆதி பராசக்தி கோவிலுக்கு சைக்கிள் பேரணியாக சென்று பொது வழிபாடு நடத்தினர்.

## திருத்தணிக்கு பாதயாத்திரை

வாரி வழங்கும் வள்ளல் டாக்டர் புரட்சித் தலைவர் பூரண குணமடைய பழனி என்ற ரவி தலைமையில் கார்த்திகேயன் முன்னிலையில் பூவிருந்தவல்லி அடுத்த குத்தம்பாக்கம் கிராமத்தில் உள்ள கோவில்களில் விசேஷ பூஜை நடத்தப்பட்டது. பின்னர் கழகத் தோழர்களும் பொது மக்களுமாக திருத்தணிக்கு பாதயாத்திரை சென்று முருகன் கோயிலில் பிரார்த்தனை நடத்தினர்.

## 44-வதுவட்டம்

தமிழக முதல்வர் டாக்டர் புரட்சித்தலைவர் உடல் நலம் பெறவேண்டி பெரம்பூர் தொகுதி 44-வது வட்டம் டிகாஸ்டர் ரோடில் உள்ள அருள்மிகு செல்வ விநாயகர் கோவிலில் விசேஷ ஆராதனை நடைபெற்றது. பெரம்பூர் தொகுதி செயலாளர் சி. ஜெயபால், வி. எஸ். கருணாகரன், எஸ். கிருஷ்ணசாமி, ச. கா. ராமு, ஆர். பாலகிருஷ்ணன், வி. எம். கோபால், சிங்கார ஜெயபால், எம். பிச்சாண்டி, ஏ. சண்முகம் எஸ். சண்முகம், ஜே. ஜானகிராமன், சுபாலி, மோகன், எஸ். கி. அரசு, ரவிக்குமார், இ. சத்தியமூர்த்தி உள்பட ஏராளமான கழகத்தோழர்களும் பொது மக்களும் கலந்து கொண்டனர்.

## சர்வமத பிரார்த்தனை

பெரம்பூர் தொகுதி 44-வது வட்டம் கன்னிகாபுரம் கஸ்தூரிபாய் காலனியில் எல்லா மதத்தினரும் ஒன்று சேர்ந்து முதல்வர் புரட்சித்தலைவர் உடல் நலம்பெற வேண்டி விசேஷ பூஜையும் பிரார்த்தனையும் நடத்தினர். பெரம்பூர் தொகுதி செயலாளர் சி. ஜெயபால் தலைமையில் வி. எம். கோபால், எஸ். கிருஷ்ணசாமி, முன்னிலையில் என். சண்முகம், எஸ். கருணாகரன், வி. எஸ். சண்முகம், பி. ஏ. சுபான் ஆகியோர் இந்த பிரார்த்தனையில் கலந்து கொண்டனர்.

## 1001 பேருக்கு அன்னதானம்

தர்மம் தலைகாக்கும் என்ற நம்பிக்கையோடு முதல்வர் புரட்சித்தலைவர் பூரண குணம் அடைய 116-வது வட்டம் காமராஜ் காலனி, பூபதிநகர் திடலில் எல். ராமன் தலைமையில் து. மதிவாணன் முன்னிலையில் 1001 பேருக்கு அன்னதானம் வழங்கப்பட்டது.

## அங்கபிரதட்சணம்

116 வது வட்டம் கிளைக் கழக செயலாளர் எஸ். எச். பாபு புரட்சித்தலைவர் பூரணநலம்பெற வேண்டி ரங்கராஜபுரம் எல்லை முத்துமாரியம்மன் கோவிலிலிருந்து தியாகராயநகர் முப்பாத்தம்மன் கோவில் வரை உடலால் உருண்டு சென்று மொட்டை அடித்து பிரார்த்தனை செய்தனர்.

இந்த பிரார்த்தனையில் 116 வது வட்ட செயலாளர் து. மதிவாணன், மாவட்ட பிரதிநிதி எம். சூரி, சிவகுமார், ஆர். குப்புசாமி, விப்டன் ஜோசப், எம். ராஜா, பட்டாபிராமன் எம். எஸ். சந்தானகிருஷ்ணன், எம். தேவன், எம். ஜி. ராம்தாஸ், ஜெயராமன், சரவணன், சங்கர், முரளி அப்பன், சிதரன் உள்பட கழகத் தோழர்களும், பொது மக்களும் கலந்து கொண்டனர்.

## விருத்தாசலம்

முதலவர் புரட்சித் தலைவர் பூரண குணமடைய விருத்தாசலம் வட்டம் ஏ. வல்லியம் கிராமம் மற்றும் கார்மாங்குடி கிராம கழகத் தோழர்கள் ஏ. வல்லியம் பால் உற்பத்தியாளர் கூட்டுறவு சங்கத் தலைவரும் இளைஞர் அணி செயலாளருமான கே. வெங்கடேசன், கார்மாங்குடி பால் உற்பத்தியாளர் கூட்டுறவு சங்க தலைவர் எஸ். வெங்கடேசன், சேதுராமன் ஆகியோர் தலைமையில் பாதயாத்திரையாக சிதம்பரம் வந்தனர்.

அவர்களை தென்னாற்காடு மாவட்ட பால்வளத் தலைவர் எம். ஏ. அபுசாலி வரவேற்று தில்லை நடராசர் கோவிலுக்கு அழைத்து சென்றார், அங்கு முதல்வர் புரட்சித்தலைவர் சுகம் அடைய விசேஷ பூஜைகள் நடத்தப்பட்டன.

## திருப்பைஞ்சிலி

லால்குடி மாவட்டம் திருப்பைஞ்சிலியில் அருள்மிகு வனத்தாயி அம்மன் கோவில் மற்றும் அருள்மிகு நீலிவனேஸ்வரர் கோவிலில் முதல்வர் புரட்சித்தலைவர் உடல் நலம் பெற விசேஷ பூஜைகள் நடத்தப்பட்டு பிரசாதங்கள் அனுப்பி வைக்கப்பட்டது.

இந்தபூஜையில் கோவில் தக்கார் இரா. தில்லான், மன்னைமாறன், எம் சண்முக சுந்தரம், இ. சுப்பிரமணி மற்றும் ஏராளமான கழகத் தோழர்களும் பொதுமக்களும் கலந்து கொண்டனர்

## பெரம்பலூர்

திருச்சி மாவட்டம் பெரம்பலூர், வரகூர் தொகுதி கழகத் தோழர்கள் 500 பேர் பெரம்பலூரிலிருந்து சமயபுரம் கோயிலுக்கு பாதயாத்திரை சென்றனர்.

முதல்வர் புரட்சித் தலைவர் பூரண சுகம் அடைய விசேஷபூஜைகள் நடத்தப்பட்டன. இதற்கான ஏற்பாடுகளை பெரம்பலூர் ஒன்றிய செயலாளர் பொன். கலியபெருமாள் செய்தார்.

## 25-வது வட்டம்

தமிழக முதல்வர் டாக்டர் புரட்சித்தலைவர் பூரண உடல்நலம் பெற்று நாட்டுமக்களுக்கு தொடர்ந்து பல்லாண்டுகள் நன்மைகள் செய்திட வேண்டும் என்று சாஸ்திரி நகரில் (பர்மா தமிழர் பகுதி) உள்ள அருள்மிகு வெற்றி விநாயகர் கோவில் 25-வது வட்ட செயலாளர் எம். செயப்பிரகாசம் தலைமையில் சி. ஜெயபால் முன்னிலையில் விசேஷ பூஜைகள் செய்யப்பட்டன ஏராளமான கழகத் தோழர்களும் பொதுமக்களும் இந்த பூஜையில் கலந்து கொண்டனர்.

## 108- வது வட்டம்

நமது இதய தெய்வம் டாக்டர் புரட்சித் தலைவர் பூரண குணமாக வேண்டி 108- வதுவட்டம் புஷ்பா நகரில் உள்ள அருள்மிகு அதிர்ஷ்ட விநாயகர் கோவில் மற்றும் செங்கேணி அம்மன் கோயிலில் விசேஷ பூஜை நடத்தப்பட்டு பிரசாதங்கள் அனுப்பி வைக்கப்பட்டன.

தொகுதி இளைஞர் அணி செயலாளர் நுங்கை மாறன், அ. ஆறுமுகம், மு. துரைராசன் ஆர். மாருதி, ஆர். எம். கிருஷ்ணன், சீனுவாசன் வி. எஸ். பழனி, ஆர். வி பெருமாள் அண்ணாமலை திருவேங்கடம், செல்வத்துரை. மற்றும் கழக, மன்றத் தோழர்கள், பொதுமக்கள் பூஜையில் கலந்து கொண்டு முதல்வருக்காக பிரார்த்தனை செய்தனர்

## ஆத்துப்பாலம்

புரட்சித்தலைவர் பூரண குணம் அடைய பொள்ளாச்சி அம்பராம்பாளையம் ஜான் ஷா அவுலியா தர்கா மற்றும் ஈச்சனாரி விநாயக கோயில், குறிச்சி காளியம்மன் கோவில், கோவை தண்டு மாரியம்மன் கோயில்களில் முதல்வர் புரட்சித்தலைவர் உடல் குணம் அடைய பூஜைகளும், பிரார்த்தனைகளும் நடத்தப்பட்டன.

அதில் கழகத் தோழர்கள் ஏ. மணி, மு. ஜக்கிரியா, எம். ஆறுமுகம், மு. அலிகுல்ஜமால், சி. இப்ராகிம், மன்ற மறவர்கள் ஏ. அலிபா, பி. ஏ. காதர், எம். சிகாமணி, இஸ்மாயில், செல்வன், சின்னத்தம்பி, எம். முகமது அலி, எம். ஜி. ஆர். இளைஞர் அணி தோழர்கள் அ. க. சித்திக், வி. மொய்தீன், முகமது அலி, உசேன், எஸ். எம். சாகுல் அமீது மகளிர் அணியை சேர்ந்த பழனியம்மாள், செபஸ்தியம்மாள், சரசு, நாகஜோதி, பாரம்தூக்கும் அண்ணா தொழிற்சங்கத்தை சேர்ந்த நன்னப்பன், ஜெயபால். சந்தனசாமி, ரபீக் சுப்பிரமணி, தங்கவேல், மணி, முனியப்பன், நாசர், ராமு. கணேசன், காஜா, மாணவர் அணியை சேர்ந்த அப்துல்ரகிம், நசிர், சுல்தான், அப்துல் பத்தார், எஸ். எம். உசேன் பசிர், எம். அலி ஆகியோர் உள்பட ஏராளமான கழக, மன்ற தோழர்களும் பொது மக்களும் முதல்வருக்காக பிரார்த்தனை செய்தனர்.

## திண்டுக்கல்

முதல்வர் புரட்சித் தலைவர் பூரண உடல் நலம் பெற செங்களூர் அக்ரஹாரத்தில் திண்டுக்கல் நகர தொண்டர் அணியின் துணைத் தலைவர் தி. பாண்டியன் தலைமையில் 200 பேர் கிறித்தவ தேவாலயத்திற்கு சென்று 100 மெழுகு வர்த்திகளை ஏற்றி விசேஷ பூஜை நடத்தினர் பின்னர் காட்டன் பேட்டை மசூதி மெஜஸ்டிக் அன்னியம்மா கோவில் சென்று விசேஷ பிரார்த்தனையும் பூஜையும் நடத்தினர்.

மேற்படி பூஜைகளில் மணி, அப்பாவு, சுப்பிரமணி, சின்ன அரசு உட்பட ஏராளமான கழகத் தோழர்களும் மன்ற மறவர்களும் பொது மக்களும் கலந்து கொண்டனர்.

## 95-வதுவட்டம்

திருவல்லிக்கேணி முஜபர் ஜங்பகதூர் தெருவில் உள்ள பால விநாயகர் ஆலயத்தில் சத்துணவு தந்த சரித்திர நாயகன் டாக்டர் புரட்சித் தலைவர் பூரண குணம் அடைய அர்ச்சனையும் பிரார்த்தனையும் செய்யப்பட்டன.

இந்த விசேஷபூஜையில் பாபுஜிகவுதம், ஜே. பி. லால், ஜெ. பாலன், அண்ணாமலை, பெ. ராஜேந்திரன், இராசேந்திரன், பெ. மாணிக்கம்,

மற்றும் கழகத் தோழர்கள், மன்ற மறவர்கள், பொதுமக்கள் ஏரானமானோர் கலந்து கொண்டனர்.

## 149-வதுவட்டம்

இந்திரா நகர் 149-வது வட்டம் எம். ஜி. ஆர். இளைஞர் அணிசார்பாக இந்திராநகர் ஸ்ரீதேவி முத்துமாரியம்மன்கோவில் டாக்டர் புரட்சித் தலைவர் நலம் அடைய வேண்டி, சிறப்பு வழிபாடு நடத்தப்பட்டது.

அவ்வமயம் பி. ஜெயராமன், எம். தெய்வசிகாமணி, வி. இளங்கோவன், ஜே. ரவிச்சந்திரன், வி. சண்முகம். கே. விஸ்வநாதன் பி. பார்த்தசாரதி, எம். ராஜா, தங்கராஜ் உட்பட கழக. மன்ற, இளைஞர் அணியினரும் பொது மக்களும் கலந்து கொண்டனர்.

## 141-வது வட்டம்

பொன்மனச் செம்மல் டாக்டர் புரட்சிதலைவர் உடல் நலம் பெற்று வழக்கம் போல் நாட்டுக்கு தொண்டு ஆற்றிட வேண்டி, 141-வது வட்ட கழக தோழர்கள் சைதை அண்ணா சிலை அருகிலிருந்து திருவேற்காடு கருமாரி அம்மன் கோவிலுக்கு பாதயாத்திரை சென்று விசேஷ பூஜை நடத்தினர்.

இந்த பூஜையில் எஸ். மூர்த்தி, ஏ. அண்ணாதுரை, ஜி. ஜெயராம் உள்பட ஏராளமான கழகத் தோழர்களும், பொதுமக்களும் கலந்து கொண்டு பிரார்த்தித்தனர்.

## நூம்பல்

ஏழைக்கு மனமிரங்கும் ஏழைப்பங்காளன் முதல்வர் புரட்சித் தலைவர் உடல் நலம் அடைய திருவேற்காடு நகர் நூம்பல் கிராமத்திலிருந்து குன்றத்தூர் மூன்றாம் கட்டளை தாய் மூகாம்பிகை கோவிலுக்கு 250 பேர் பாதயாத்திரை சென்று சிறப்பு பூஜை நடத்தினார்கள்.

ஜே சி. டி. பிரபாகரன் எம். எல். ஏ. பாதயாத்திரையை தொடங்கி வைக்க, என், பி. விக்டர் சாமுவேல் தலைமை வகித்தார்.

மற்றும் எம். ஞானபிரகாசம், டி. நித்யானந்தம், எல். குமார், ஜானகிராமன், ஆதிகேசவன் ஆகியோரும் பாதயாத்திரையில் கலந்து கொண்டனர்.

## புதுக்கோட்டை

புதுக்கோட்டை மாமன்னர் கல்லூரி மாணவர்கள் சார்பில் புதுகை "புவனேஸ்வரி அம்மன்" கோயிலில் முதல்வர் புரட்சித் தலைவர் உடல் பூரண குணம் பெற விசேஷ பூஜை நடைபெற்றது. இதில் மாணவர் அணிச் செயலாளர் காளியப்பன், கால்ராஜி, சத்தியமூர்த்தி, மணிவண்ணன் மற்றும் 350-க்கும் மேற்பட்ட கழக மாணவர் அணியினர் கலந்து கொண்டு பிரார்த்தனை செய்தனர்

## புதுவை

புதுவை ரிக்ஷா தொழிலாளர் சங்கம் சார்பாக தமிழக முதல்வர் புரட்சித் தலைவர் உடல் பூரண குணமடைய புதுவை மாநிலம் முழுவதுமுள்ள கோயில்களில் விசேஷ பிரார்த்தனைகள் நடைபெற்றன.

இதில் நந்தன், பி. கோலோகநாதன் சுப்பிரமணியம், முனுசாமி, ராமலிங்கம் எம். எல். ஏ. அன்னபூரணி, சின்னதுரை, ராதாகிருஷ்ணன், உமாபதி, மணிவண்ணன் பாண்டுரங்கன் புலிவேந்தன், ஜெயபாலன், சின்னசாமி ராஜாக்கண்ணு மற்றும் ஏராளமான கழகத் தோழர்களும், பொதுமக்களும் கலந்து கொண்டு முதல்வர் புரட்சித்தலைவர் குணமடைய பிரார்த்தனை நடத்தினர்.

இலங்கையிலிருந்து தமிழகம் திரும்பிய கழக தொண்டர்கள் முதல்வர் புரட்சித்தலைவர் உடல் பூரண குணம் பெற பாதயாத்திரையும், சர்வமத பிரார்த்தனையும் நடத்த உள்ளனர்.

இதற்காக இலங்கையிலிருந்து அனைத்திலங்கை எம். ஜி. ஆர் மன்றத்தின் சார்பாக தொண்டர்கள் தமிழகம் வந்துள்ளனர். இவர்கள் இந்த பாதயாத்திரையிலும், பிரார்த்தனைகளிலும் கலந்து கொள்வார்கள் என்று தாயகம் திரும்பியோர் மறுவாழ்வுப் பேரவைத் தலைவர் நெய்னார் ஒரு அறிக்கையில் கூறியுள்ளார்.

## 134-வது வட்டம்

சென்னை 134-வது வட்டத்தில் சண்முகபுரம் எம். ஜி. ஆர். பொதுப் பணிமன்றத்தின் சார்பாக பொது வழிபாடு நடந்தது

# புரட்சித்தலைவர் குணம்பெற பால்குடம் சுமந்த சிறுவர்கள்

தஞ்சை, அக். 26— தமிழக முதல்வர் புரட்சித் தலைவர் பூரண நலம் பெற சிறுவர்கள் கொளுத்தும் வெய்யிலில் பால் குடம் சுமந்து சென்றனர்.

முதல்வர் புரட்சித் தலைவர் உடல் நலம் குன்றி ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப்பட்டு சிகிச்சை பெற்று வருகிறார், அவர் உடல் பூரண குணமடைய தமிழகம் முழுவதும் உள்ள கோயில்களில் கழகத் தோழர்களும், பொது மக்களும் விசேஷ அர்ச்சனைகளும்; பூஜைகளும் செய்துவருகின்றனர்,

மேற்குத்தஞ்சை எம். ஜி. ஆர் இளைஞர் அணி சார்பாக முதல்வர் புரட்சித்தலைவர் உடல் நலம்பெற பாதயாத்திரை நடைபெற்றது

இதில் 8 வயது சிறுவன் சிவவீரபாண்டியன் உட்பட 5 சிறுவர்கள் கொளுத்தும் வெய்யிலில் பால்குடம் சுமந்து சென்றனர்

பாபநாசத்திலிருந்து சுவாமிமலை வரை அவர்கள் பால்குடம் சுமந்து சென்றனர்; முன்னதாக பாபநாசம் முத்துமாரியம்மன் கோயிலில் விசேஷ பூஜை நடைபெற்றது. இதில் துரைக்கண்ணு, ஜோதிராமன், அசோகன் மற்றும் 100க்கும் மேற்பட்டவர்கள் கலந்து கொண்டனர்,

பின்னர் சுவாமிமலையில் முதல்வர் புரட்சித் தலைவர் பூரண குணம் பெற பாலபிஷேகம் நடைபெற்றது கோவில் பிரசாதங்கள் முதல்வர் புரட்சித் தலைவருக்கு அனுப்பப்பட்டன,

# திருவொற்றியூரில் சங்கபிஷேகம் - அன்னதானம்

சென்னை, அக். 26- புரட்சித்தலைவர் உடல் நலம்பெற திருவொற்றியூரில் சங்கபிஷேகமும் அன்ன தானமும் நடத்தது.

திருவொற்றியூர் தியாகராஜசாமி கோவில்ல் 1008 சங்கபிஷேகமும், வேதபாராயணமும் நடந்தது. மிருத்யுஞ்சய ஓமம், மார்க்கண்டேய ஓமம் ஆகியவை நடத்தப்பட்டது.

ராயபுரம் பகுதி எம். ஜி. ஆர். மன்றங்கள் இதற்கான ஏற்பாடுகளை செய்திருந்தன.

சபாநாயகர் ராசாராம், அமைச்சர் திருச்சிசவுந்தரராசன், மதுசூதனன் எம். எல், சி., அனகாபுத்தூர் ராமலிங்கம் எம். எல். சி. குமரி அனந்தன் எம். எல். ஏ. தாமரைக் கனி எம். எல். ஏ ஆகியோர் கலந்துகொண்டனர்.

2000 பேருக்கு அன்னதானம் வழங்கப்பட்டது. திருப்பூர் மணிமாறன் எம். எல். ஏ, மதுசூதனன் எம்எல்சி தாஸ் மற்றும் பலர் கலந்துகொண்டு அன்னதானம் செய்தனர்.

மதுரை அண்ணா பேருந்து நிலையத்திலிருந்து திருப்பரங்குன்றம் முருகன் கோவிலுக்கு சமயநல்லூர் சட்டமன்ற உறுப்பினர் பாலுசாமி, இராமநாதபுரம் மாவட்ட செயலாளர் பொ. அன்பழகன் பால்வள தலைவர் வெ. பாலகுரு ஆகியோர் தலைமையில் 500க்கும் மேற்பட்டவர்கள் பாதயாத்திரையாக சென்று முருகனுக்கு பால் அபிஷேகம் மற்றும் விசேஷ பிரார்த்தனை நடத்தினர்

# கட்சிபேதமின்றி மதுரை மாவட்டம் முழுவதிலும் பிரார்த்தனைகள்

**மதுரை, அக். 26- முதல்வர் புரட்சித்தலைவர் உடல் நலம் பெற மதுரை மாவட்டத்தில் பல்வேறு அமைப்புகள் சார்பில் சிறப்பு வழிபாடுகள் நடந்தன.**

திருமோகூர்காளமேகப் பெருமாள் கோவிலில் மகளிர் பிரிவு அமைப்பாளர் வேலம்மாள் தலைமையில்சக்கரத்தாழ் வாருக்கு விசேஷ அபிஷேகம் பூஜைகள் நடைபெற்றன. திரளான பொது மக்கள் கலந்து கொண்டனர்.

சோழவந்தான் ஜெனகை மாரியம்மன் கோவிலில் முதல்வர் குணம் அடைய லட்ச அர்ச்சனை தொடங்கப்பட்டது, லட்ச அர்ச்சனையை பால்வளத்தலைவர் வெ. பாலகுருதுவக்கி வைத்தார், 10 நாட்கள் தொடர்ந்து லட்ச அர்ச்சனை நடைபெறுகிறது. எம். ஜி. ஆர். மன்ற தோழர்களும், பொதுமக்களும் கலந்து கொண்டனர்.

காலம்படு சக்தி விநாயகர் கோயிலில் தலைமைக் கழக பேச்சாளர் பாலமேடு என். ரத்தினம் தலைமையில் விசேஷ பிரார்த்தனை நடைபெற்றது. கிராம மக்களும், கழகத்தோழர்கள் கலந்து கொண்டனர்.

கிழக்குமுகவைமாவட்ட காங்கிரஸ் கமிட்டி பிற்படுத்தப்பட்டோர் பிரிவு தலைவர் வெ. ... விடுத்துள்ள அறிக்கையில் புரட்சித்தலைவர் நலம் பெற அர்ச்சனை நடத்துமாறு தனது கட்சியினரை கேட்டுக் கொண்டார்.

## நவக்கிரக பூஜை

கூடழகர் பெருமாள் கோவிலில் அமைந்துள்ள நவக்கிரக சன்னதியில் புரட்சித்தலைவர் பூரணம் நலம் பெற்று பல்லாண்டு வாழ கூடழகர் பெருமாள் கோவில் பணியாளர்கள் சார்பில் நவக்கிரகங்களுக்கு விசேஷ அலங்கார திருமஞ்சனமும் சிறப்பு வழிபாடும் நடைபெற்றது. கோவில் பிரதானபட்டர் டி. என். எஸ் கேசவபட்டர் தலைமையில் ஒன்பது நவக்கிரகங்களுக்கும் ஒன்பது பட்டர்கள் வழிபாடு நடத்தினார்கள். இந்த வழிபாட்டில கோவில் தக்கார் சி. தங்கம் செயல அலுவலர் வேலுச்சாமி மற்றும் கோவில் பணியாளர்கள் கலந்து கொண்டனர்.

மதுரை 7 வார்டில் உள்ள அரசு குடியிருப்பில் உள்ள மேல்மருவத்தூர் ஆதிபராசக்தி வழிபாட்டு மன்றத்தில் முதல்வர் குணம் அடைய எம். ஜி. ஆர். மன்ற செயலாளர் இரா. இராசேந்திரன் தலைமையில் விசேஷ வழிபாடுநடத்தப்பட்டது. பல அரசு ஊழியர்கள் இதில் கலந்து கொண்டனர்.

மானாமதுரை அனந்தவல்லி அம்மன் கோயிலில் முதல்வர் உடல்நலம்பெற வேண்டி 17-10-84 முதல் 21-10-84 வரை தினந்தோறும் லட்ச அர்ச்சனை நடைபெற்றது. 21-10-84 அன்றுநடைபெற்றவிசேஷ பூஜையில் மாவட்ட ஆட்சித்தலைவர் குருமூர்த்தி, பொ. அன்பழகன்; சிவகங்கை கோட்டாட்சிதலைவர் மணி கோட்ட வளர்ச்சி அலுவலர் மாரியப்பன், வட்டாட்சியர் கணபதி, வட்டார வளர்ச்சி அலுவலர் சீனிவாசன், உதவி மக்கள் தொடர்பு அதிகாரிகள் இராவணன், இராமநாதன் ஆகியோர் கலந்து கொண்டனர். ஏராளமான அளவில் பெண்கள கலந்து கொண்டனர். எம்.ஜி.ஆர்.மன்றதோழர்கள் 10 பேர் அங்கப்பிரதட்சணம் செய்தார்கள்.

## கூட்டு வழிபாடு

புரட்சித் தலைவர் விரைவில் குணம் அடைய மதுரையில மாபெரும் கூட்டு வழிபாடு நடந்தது இதில் 5,000த்துக்கும்மேற்பட்ட மக்கள் கலந்து கொண்டனர்

மதுரை மேல மாசிவீதி வடக்கு மாசி வீதி சந்திப்பில் நேரு ஆலால சுந்தர விநாயகர் கோவில்முன்பு 3 பெரிய மேடைகள் அமைக்கப்பட்டு இருந்தன ஒருமேடையில்கோபுரசின்னமும்மற்ற இருமேடைகளில் முறையே சிலுவை பிறை போன்ற சின்னங்களும் மின் விளக்குகளால் அலங்கரிக்கப்பட்டு இருந்தன.

முதலில் இஸ்லாம் மதத்தின் சார்பில் இறைவணக்கப் பாடல்களை எஸ் எம். அனீபா பாடி முதல்வர்குணம் அடைய பிரார்த்தனை செய்தார். பின் நகர் முஸ்லிம் லீக் தலைவர் ஹாஜி, மொஹுதீன் முன்னிலையில இஸ்லாம மத பெரியவர்கள பாத்தியா ஓதி முதல்வர் குணம் அடைய வேண்டினர், பாத்தியா ஓதி முடிந்தபின்பு அனைவருக்கும் இனிப்பும் பேரிச்சம்பழமும், ரோஜாப்பூ கொடுத்தனர்.

இரண்டாவதுகிறிஸ்தவ பாதிரியார் அமலான் தலைமையில் சதங்கை குழுவினர் கிறிஸ்துவ பாடல்களை பாடி ஜெபம் செய்து முதல்வர் குணம் அடைய வேண்டினர். இதற்கு முன்னாள் மேயர் பட்டுராசன் தலைமை வகித்து முதல்வர் குணம் அடைய பிரார்த்தனை செய்தார்,

இந்து மதத்தின் சார்பில் ஆயுள் விருத்தியாகம் நடத்தப்பட்டது. மீனாட்சிகோவில் பட்டர் தங்கம் தலைமையில் ஒன்பது ஆச்சாரியான் வேத மந்திரங்களை ஓதினார்கள்.

இந்த மந்திரங்கள் ஓதுவதற்கு முன்னர். நகர பிரமுகர்கள் கருமுத்து கண்ணன், எம். இராமச்சந்திரன், எம்.பி, கோவிந்தராஜ் ஐ.என்.டி.யு.சி. டாக்டர்கள். அமீர்ஜான், ஹமாதுல்லா, சத்தார், அனைத்திந்திய அண்ணா தி.மு.கழகத்தை சார்ந்த நகர் மாவட்ட செயலாளர் எஸ். பாண்டியன், வெ. பாலகுரு, பொ. அன்பழகன், ... லட்சுமி நாராயணன், ஆகியோர் மேடைக்கு அழைக்கப்பட்டு மதத்தலைவர்களை திருப்தி கூறினார்கள். பின்பு தொடர்ந்து ஓதுவார்கள் மந்திரங்களைப் பாடி முடிவில் விநாயக பெருமானுக்குபூஜை செய்யப்பட்டது எல். நாராயணன் செட்டியார் ஆயுள் விருத்தி யாகத்தை முடித்து வைத்தார்.

முன்னதாக தமிழ்மணி-மல்லிகா குழுவினர் கடவுள் வாழ்த்து பாடல்களைப் பாடினார்கள். பொதுமக்கள் ஏராளமானவர்கள் கலந்து கொண்டனர்.

ஜனதாகட்சியைச்சார்ந்த என்.எஸ். ராமமூர்த்தி, இ.பாரதியன், கழகத்தின் சார்பில் இ. தங்கம், இளைஞர் அணியை சார்ந்த ராஜு, பேச்சாளர்கள் கருணைதாசன், வேலம்மாள், சாதுராஜன், மானகிரியாண்டி, அன்னம்மாள். வெற்றிலை பாக்கு இலை வியாபாரிகள் சங்க செயலாளர் ராமகிருஷ்ணன் மற்றும் அரசு அதிகாரிகள் ஏராளமானவர்கள் கலந்துகொண்டனர். அத்தனை பேரும் ஒட்டு மொத்தமாக இறைவா எங்கள் முதல்வருக்கு நல்லகம் கொடுஎன குரலில் பாடினார்கள்.

## உண்ணா நோன்பு

முதல்வர் புரட்சித் தலைவர் விரைவில்குணம் அடைய 62 வது வட்டத்தில் புரட்சித்தலைவர் மன்றத்தின் சார்பில் 50க்கும் மேற்பட்டவர் நேற்றுஒரு நாள் உண்ணாவிரதம் இருந்தனர். க.துரைப்பாண்டி, சந்திரன் பா. ராமச்சந்திரன் ஆகியோர் தலைமையில் உண்ணாவிரதம் நடைபெற்றது.

முன்னாள் துணை மேயர் முனிய சாமி உண்ணாவிரதத்தை தொடங்கி வைத்தார் அப்போது அந்த வழியாக பள்ளிக்கு சென்றுகொண்டிருந்த சிறுமி பானுமதி தானும் உண்ணாவிரதம் இருப்பதாக சொல்லி மாலை வரை உண்ணாவிரதம் இருந்தது குறிப்பிடத்தக்கது. இந்த குழந்தைக்கு பெயர் சூட்டியது புரட்சித்தலைவர் தான்.

## சித்தன் தலைமையில் பாதயாத்திரை

முதல்வர் புரட்சித் தலைவர் விரைவில் குணம் அடைய இ. காங் சட்டமன்ற உறுப்பினர் சித்தன் தலைமையில் 500 பேர் திருமங்கலத்திலிருந்து அழகர் கோவில வரை சென்று அழகர் கோவிலில விசேஷ பூஜை அபிஷேக ஆராதனை செய்து இறைவனை வழிபட்டனர். ஆண்டிச்சாமி, ஆனந்தன். ராமசாமி ஜெயராமன் இ. காங்கிரஸ் சார்பில் பாலுச்சாமி முருகேசன் ஆகியோர் உட்பட 500க்கு மேற்பட்டவர்கள் கலந்து கொண்டனர்.

வால்பாறை தொகுதி தாய்முடி ... பிரிவிலுள்ள கழகத்தினரும் மற்றும் அனைத்துக்கட்சி பிரமுகர்களும் பொது மக்களும் சேர்ந்து ஸ்ரீமாரியம்மன் ஸ்ரீவிநாயகர் ஆலயங்களில் பாலாபிஷேகம் சர்க்கரைப்பொங்கல் வைத்து பிரார்த்தனை செய்தார்கள்.

கிறிஸ்துவ ஆலயத்திலும் முதலவர் நலம் பெற பிரார்த்தனை நடத்தினார்கள். வால்பாறை ஒன்றிய துணை செயலாளர் எஸ். எம். ஆர்துசாமி, எஸ். கிருஷ்ணன்குட்டி, டி. ஞானபிரகாசம், எம். பி. செல்லத்துரை, இ. காங்கிரசைச் சேர்நத வி. சின்னமுத்து, எம். முருகேசன் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியைச் சேர்நத ஏ.கே. மாதவன், பி. குருசாமி, திமுகவைச் சேர்ந்த சந்திரன், தங்கவேலு மற்றும் திரளான ஆண்களும் பெண்களும் கலந்துகொண்டு முதலவர் நலம்பெற வேண்டுமென பிரார்த்தனை நடத்தினார்கள்.

வியாகத் அலி உட்பட 500 க்கும் மேற்பட்ட மகளிர் பிரிவினர் பங்கேற்று பிரார்த்தனை நடத்தினர்.

## வேளச்சேரி

தமிழக முதல்வர் புரட்சித்தலைவர் உடல் நலம் பெற வேளச்சேரி தண்டபாணீஸ்வரர் கோயில் ஆலயத்தில் விசேஷ பூஜைநடைபெற்றது. இதில் ஏராளமான கழகத் தோழர்கள் பங்கேற்று பிராத்தனை நடத்தினர்.

முதல்வர் புரட்சித் தலைவர் உடல்நலம்பெற தாட்டு பிள்ளையார் கோயிலில் விசேஷ பூஜை நடைபெற்றது. இதில மதுரைமுத்து, ராமன், குமார், அண்ணாதுரை, கபூர், சுந்தரேசன், நாகலிங்கம் மற்றும் ஏராளமான கழகத்தோழர்கள் கலந்து கொண்டனர்,

## போக்குவரத்து ஊழியர்கள்

தமிழக முதல்வர் உடல் நலம்பெற்று பல்லாண்டு வாழவேண்டும் என்று திருவள்ளுவர் போக்குவரத்துக்கழகம், பட்டுக்கோட்டைஅழகிரி போக்குவரத்துக் கழக ஊழியர்கள் அண்ணாசாலையில் உள்ள அண்ணாசிலையின் முன்பு உணணாவிரதம் இருந்தனர். இதில் சிவபெருமான், செல்வராஜ உட்பட பலர் கலந்து கொண்டனர். மாலை பல்லவன் சாலையிலுள்ள ஆலையங்களில் சிறப்பு வழிபாடுகள் நடைபெற்றன,

## கோடம்பாக்கம்

கோடம்பாக்கம் பகுதி ஓட்டல் தொழிலாளர்கள சங்கம் சார்பாக தமிழக முதல்வர் புரட்சித தலைவர் உடல்நலம்பெற கோடம்பாக்கம் மேம்பாலத்திலிருந்து பாதயாத்திரையாக புறப்பட்டு வடபழனி கோயில் விசேஷ பூஜை நடைபெற்றது. இதில் சௌரிராஜன் எம்.எல்.ஏ. முருகேசன், சிவானந்தம், அகமது, முகமது, சக்தி, சாமி, மோகனப்பா, பாபு மதுரை, சீலன், விஜயன் செல்வராஜ், வாசு, தர்மராஜன். மற்றும் ஏராளமான பேர் கலந்து கொண்டனர்.

## 43-வது வட்டம்

சென்னை 43-வது வட்டம் எம்.ஜி.ஆர். நற்பணி மன்றம் சார்பாக முதல்வர்புரட்சித்தலைவர் உடல் நலம் பெற முத்துமாரிஅம்மன் ஆலையத்தில் விசேஷ பூஜை நடைபெற்றது. இதில் கழகத்தவரும், பொது மக்களும் ஏராளமான பேர் கலந்து கொண்டனர்

கொண்டனர்

## ஓவியர்கள் பிரார்த்தனை

தமிழக முதல்வர் புரட்சித்தலைவர் உடல் நலம் பெற தமிழகத்திலுள்ள தலைசிறந்தஓவியர்கள சிற்பிகள்கலைஞர்கள் சார்பில் சென்னை கிரீம்ஸ் ரோடில் உள்ள லலித்கலா அகடமி அரங்கில் விசேஷ பிரார்த்தனை நடைபெற்றது. இதில் ராசாராம், ஜெயச்சந்திரன் மற்றும் ஏராளமான கலைஞர்கள் பங்கேற்றனர்.

## வால்பாறை

வால்பாறை ஒன்றிய கழகம் சார்பாக முதல்வர் புரட்சித் தலைவர் உடல் நலம் பூரண குணம் பெற அப்பகுதியில் உள்ள கோயில்களில் விசேஷ பிரார்த்தனைகளும், பாதயாத்திரையும் நடைபெற்றது. இதில்பொன்னுசாமி, ஆரோக்கியசாமி, ஜெயராஜ், அரசன், கிருஷ்ணன்குட்டி, குமார், மணிவேல், வேல்சாமி, தோமஸ், முத்துசாமி, சாமி, கண்ணன், தேவபிச்சை, பெருமாள் மற்றும் ஏராளமான பேர் கலந்து கொண்டனர்,

## சிவராஜபுரம்

சென்னை 59வது வட்டம் சிவராஜ புரத்தில் உள்ளமுண்டகக்கண்ணியம்மன் ஆலயத்தில் முதல்வர் புரட்சித்தலைவர் விரைவில் உடல் நலம் பெற எம். கண்ணன், பொன்னுசாமி, செல்வராஜ், பொய்யாமொழி, மற்றும் அனைத்துக் கட்சியினரும் பொது மக்களும் சேர்ந்து விசேஷ பூஜை நடத்தினர்.

## பெரம்பூர்

பெரம்பூர் தொகுதி அருந்ததியர் நகர் பொது மக்கள் முதல்வர் புரட்சித் தலைவர் நலம் பெற வேண்டி 1000 பேர் களுக்கு உணவு அளித்தனர். போலார் அம்மன் ஆலயத்தில் விசேஷ பூஜை நடத்தினர், பூஜையில் சி. ஜெயபால், என். சண்முகம், கருணாகரன், வி. எம். கோபால் வி.எஸ்.சண்முகம், சத்தியமூர்த்தி, முனுசாமி, சிங்கார ஜெயபால், நாராயணன், சுபான் மற்றும் ஏராளமானோர் கலந்து கொண்டனர்.

## யாதவ மகாசபை

தமிழ்நாடு யாதவ மகா சபையைச் சேர்ந்தமக்கள் தமிழகமுதல்வர் விரைவில் நலம்பெற பிரார்த்திப்பதாக மகாசபையின் தலைவர் எஸ். லட்சுமணயாதவ் தெரிவித்துள் ளார்

## சட்டமன்ற கடைநிலை ஊழியர்கள்

தமிழ்நாடு சட்டமன்ற தற்காலிக கடைநிலை ஊழியர்கள் டி. ஜி. குப்புசாமி தலைமையில் மேல் மருவத்தூர் ஆதி பராசக்தி ஆலயத்தில் முதல்வா புரட்சித்தலைவர் விரைவில் நலம்பெற பிரார்த்தனை செய்தனர்.

---

முதல்வர் பற்றி தவறான செய்தி:

# உடலை பிளேடால் அறுத்துக்கொண்டு தீ குளித்த கழகதோழர்

## உயிருககு ஆபத்தானநிலையில் ஆஸ்பத்திரியில் அனுமதி

**தஞ்சை, அக். 26- முதல்வர் உடல் நிலையை பற்றி தவறான தகவலைக் கேள்வியுற்ற கழகத் தோழர் கிருஷ்ணன், பிளேடால் உடலை அறுத்துக் கொண்டு தீக்குளித்தார். தற்போது கிருஷ்ணன் உயிருக்கு ஆபத்தான நிலையில் ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப்பட்டுள்ளார்.**

முதல்வர் புரட்சித் தலைவர் உடல் நிலை குறித்து சிலர் வேண்டுமென்றே வதந்திகளை கிளப்பிவிடுகிறார்கள். இதனால்உணர்ச்சிமிகுந்த கழகத் தோழர்கள் வதந்தியை நம்பி இதுவரை 13 பேர் தங்கள் இன்னுயிரை மாய்த்துக் கொண்டுள்ளார்கள்.

தஞ்சை மேல வீதியைச் சேர்ந்தவர் கழகத்தோழர் கிருஷ்ணன் புரட்சித் தலைவர் மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்ட நாளில் இருந்து மிகவும் சோகமாக இருந்தார்.

கடந்த 23-ந் தேதி முதல்வர் உடல்நிலை குறித்து தவறான தகவலைக் கேள்விப்பட்டார். உடனே பிளேடால் தன் உடலைக் கிறிக்கொண்டு உடலில் மண்எண்ணையை ஊற்றிக் கொண்டு தீவைத்துக் கொண்டார்.

உடனே அருகில் இருந்தவர்கள் கிருஷ்ணனை ஆஸ்பத்திரியில் சேர்த்தனர்.

மாவட்ட எம் ஜி ஆர். இளைஞர் அணிச் செயலாளர் ஆழி கோ. மருதையன், நகரச் செயலாளர் மோகன், சிவ, அம்பலத்தரசன், சுந்தரமூர்த்தி சுந்தரமூர்த்தி, ரெங்கநாதன், பன்னீர், சந்திரகாசன், ஆரி, கிருஷ்ணன் மணி, ராமதுரை ஆகியோரும் மற்றும் ஏராளமான கழகத் தோழர்கள் உடனிருந்து கவனித்து வருகிறார்கள்,

கிருஷ்ணனின் உடல் நிலை ஆபத்தாக உள்ளதாக கூறப்படுகிறது.

## 10-வட்டத்தில் பாதயாத்திரை

ராயபுரம் 10 - வது வட்டம் எம். ஜி. ஆர் மன்றங்கள் சார்பில், முதல்வர் விரைவில் நலம் பெறமேல்மருவத்தூருக்கு பாதயாத்திரையாக கழகத் தோழர்கள் இன்று (26-ந் தேதி) செல்லுகிறார்கள்.

## கைவண்டி வியாபாரிகள்

வட சென்னை அண்ணா மண்ணெண்ணை கைவண்டி வியாபாரிகள் திருவொற்றியூர்வடிவுடையம்மன் ஆலயத்திற்கு பாதயாத்திரையாக28-ந்தேதி மாலை 3 மணிக்கு புறப்படுகிறார்கள் இந்தபாதயாத்திரை ராயபுரம் போலீஸ்நிலையம் அருகில் இருந்து புறப்படுகிறது.

## சென்னை மாநகராட்சி அலுவலர்கள் சங்கம் வழிபாடு

முதல்வர் புரட்சித் தலைவர் விரைவில் நலம் பெற சென்னை மாநகராட்சி அலுவலர் சங்கச் சார்பிலும், அனைத்து பணியாளர்கள் சார்பிலும் தீர்மானம் நிறைவேற்றி வழிபாடுநடத்தினார்கள்.

முதல்வருக்கு தீவிர சிகிச்சை அளித்து வரும் மருத்துவர்களுக்கு சங்க சார்பில் பாராட்டு தெரிவிக்கப்பட்டது.

## மயிலை

முதல்வர் புரட்சித் தலைவர் பூரண குணமடைய வேண்டி, 134 வது வட்டம் சண்முகபுரம் எம். ஜி. ஆர். பொது பணி மன்றம் சார்பில காமராஜ்சாலையில்உள்ள முத்து மாரியம்மன் ஆலயத்தில் விசேஷ பூஜை நடத்தப்பட்டது,

பூஜையில் சட்டமன்ற உறுப்பினர் டி.கே.கபாலி மயிலை பகுதி செயலாளர் எம், கே. பாலன், மந்தைவெளி நடராசன். வேணு கோபால், வி. ஸ்ரீராம, எ. ஆறுமுகம், குப்புசாமி வி. வேலு, வி. ஆறுமுகம் எஸ். அரங்கநாதன் கேசவன், பாலகிருஷ்ணன் உட்பட ஏராளமான கழக உறுப்பினர்களும் கலந்து கொண்டனர்.

---

முதல்வரால் பெயர் சூட்டப்பட்ட

## 9 வயது சிறுமி உண்ணாவிரதம்

மதுரை 62 வது வட்ட எம்.ஜி.ஆர்.இளைஞர் நற்பணி மன்றத்தினர் பே.சந்திரன் பா. ராமசந்திரன் க. கனி, க. துரைப்பாண்டியன் தலைமையில் 50க்கு மேற்பட்ட ஆண்களும் பெண்களும் உண்ணா விரதமிருந்தனர் எல். தங்கவேல், எம். பாண்டியன் முன்னிலையில் முன்னாள் துணை மேயர் முனியசாமி துவக்கிவைத்து உரையாற்றிக் கொண்டிருக்கும் போது பள்ளிக்குச் சென்ற சிறுமி பானுமதி பையை தூக்கி எறிந்துவிட்டு எனக்கு பெயர் சூட்டிய முதல்வர் உடல் நலம் பெற நானும் உண்ணாவிரதமிருப்பேன் என்று அமர்ந்துகொண்டான் இளைஞர் அணித் துணைத் தலைவர் ஜி. கிருஷ்ணமூர்த்தி உண்ணாவிரதத்தை முடித்து வைத்தார்.

மாலையில் நடந்த இந்து, முஸ்லிம், கிறித்தவ மத பிரார்த்தனையில் அந்த சிறுமி மனம் உருகி உன்னுடனே வருகின்றேன் என் உயிரைத் தருகிறேன் பெரியப்பாவைக் காப்பாற்று எனப்பாடியது அனைவர்கண்களிலும் நீரை வரவழைத்தது. இறுதியில் வட்ட எம்.ஜி.ஆர். இளைஞர் அணி செயலாளர் எம். ராஜபாண்டி நன்றி கூறினார்.

---

# பொன்மனச் செம்மல் விரைவாக நலம்பெற தமிழகமெங்கும்வழிபாடு

**சென்னை, அக. 26. பொன்மனச்செம்மல் புரட்சித் தலைவர் பூரண நலம் பெற தமிழகம எங்கும் மக்கள் ஒன்று பட்டு பிராத்தனைகளை தொடாந்து நடத்தி வருகிறார்கள்.**

மருத்துவமனையில் சிகிச்சை பெற்று வரும் முதல்வர்புரட்சித்தலைவர் பூரணநலம் பெற தமிழகமெங்கும் கோவில்கள், தேவாலயங்கள், மசூதிகள் ஆகியவற்றில் தொடர்ந்து விசேஷ பிரார்த்தனைகள் வழிபாடுகள் நடந்து வருகின்றன.

## 121-வது வட்டம்

சென்னை 121-வது வட்டத்தில் டி. உமாபதி, மு. வேதாசலம், கண்ணன், மாரிமுத்து, வீராசாமி, மணி, ஏழுமலை, ஆர். ...சாமி, மற்றும் ஏராளமானவர்கள பங்கேற்ற பொது வழிபாடும் அன்னதானமும் நடந்தது.

## 1-வது வட்டம்

சென்னை 1 வது வட்டத்தில் முதல்வர் விரைவில் நலம் பெற கங்கையம்மன் கோவிலில் பொது வழிபாடு நடந்தது இதில் ஜம்புலி வடிவேல் மற்றும் ஏராளமானவர்கள் பங்கேற்றனர்.

## அறநிலைய ஊழியர்கள

தமிழ்நாடு இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை அலுவலர் சங்க ஊழியர்கள, முதல்வர் விரைவாக நலம்பெற பொது வழிபாடு நடத்தினர்,

## தேர்வுபணியாளர்கள்

மண்டல அரசுத்தேர்வுகள் இயக்கப் பணியாளர் சங்க பொது குழுவில் முதல்வர் விரைவில் நலம் பெற தீர்மானம் நிறைவேற்றப்பட்டு பிரார்த்தனையும் நடந்தது.

## கோட்டாம்பட்டி

பொள்ளாச்சியை அடுத்த கோட்டாம்பட்டியில் 37 வட்ட கழகத்தின் சார்பாகவும் பாக்கியராஜ் நற்பணி மன்றத்தின் சார்பாகவும் பொதுவழிபாடு நடந்தது.

## திருமங்கலம்

அண்ணாநகர் திருமங்கலம் எம். ஜி. ஆர். பொதுபணி மன்றத்தின் சார்பில் தமிழக முதல்வர் புரட்சித் தலைவர் உடல் பூரண குணமடைய புரசைபகுதி 63-வது வட்டத்திலுள்ள திருமனி அம்மன் ஆலயத்தில் அங்கப்பிரதட்சணம் நடைபெற்றது. இதில் ஜே. சி. டி. பிரபாகரன் எம்.எல்.ஏ, கோ. அ. ஜார்ஜ், மோகன், சேகரன், பத்மநாபன், சிவலிங்கம், கணேசன், ரங்கநாதன், கிருஷ்ணமூர்த்தி, வஜ்ஜிர வேலு மாணிக்கம் மற்றும் ஏராளமான கழகதோழர்கள் இதில் பங்கேற்றனர். பின்னர் 500 பேருக்கு அன்னதானம் வழங்கப்பட்டது.

## ராதாகிருஷ்ண நகா

தமிழக முதல்வர் புரட்சித்தலைவா உடல் பூரண குணமடைய ராதாகிருஷ்ணநகர் எம். ஜி. ஆர். இளைஞர் அணி சார்பில மகளிர் பிரிவினர் பாதயாத்திரையாக திருவொற்றியூர் வடுவடையம்மன் கோயிலுக்கு ... சேரன் ... துல சரோஜா, கிருஷ்ணவேணி

## பதிவுத்துறை அலுவலர்கள்

தமிழக முதல்வர் புரட்சித்தலைவர்உடல் நலம் பெற்று மீண்டும் தமிழகமக்களுக்கு தொண்டாற்ற வேண்டும் என்று தம்பு செட்டி தெருவில் உள்ள காளிகாம்பாள் கோயிலில் தமிழ் நாடு பதிவுத் துறை மாநிலப் பணி அலுவலர்கள் சங்கம் சார்பில் விசேஷ அர்ச்சனை நடைபெற்றது இதற்கான ஏற்பாடுகளை அச்சங்க பொதுச் செயலாளர் ராஜதுரை செய்திருந்தார்.

## அரசு நிறுவனங்கள்

அரசு நிறுவனங்கள் மற்றும் தனிநிறுவனங்கள் சார்பாக தமிழகமுதல்வர் புரட்சித்தலைவர் உடல் நலம் பெற ராஜாஜி மண்டபத்தில் விசேஷ பிரார்த்தனை நடைபெற்றது. இதில் அமைச்சர் கோமதி சீனிவாசன் சரோஜினி வரதப்பன், சுலோசனா சம்பத், தாராசெரியன் மற்றும் ஏராளமான அரசு நிறுவன ஊழியர்கள் கலந்து

---

# முதல்வர் பூரண நலம் பெற இலங்கை அகதிகள் வழிபாடு

நெல்லூர், அக், 26— முதல்வர் புரட்சித் தலைவர் பூரண உடல் நலம் பெற இலங்கை அகதிகள் விசேஷ பூஜை செய்து வழிபாடு செய்தனர்.

இலங்கையில் இருந்து தாயகம் திரும்பிய அகதிகள் சுமார் 150 பேர் நெல்லூரில் உள்ள கூட்டுறவு நூற்பாலையில் வேலை செய்து வருகின்றனர்.

முதல்வர் புரட்சித் தலைவர் விரைவில் பூரண உடல் நலம் பெறவேண்டும் என்று விசேஷ பூஜை செய்தனர்.

நெல்லூரில் உள்ள ராஜராஜேஸ்வரி கோவிலில் விசேஷ பூஜை செய்து வழிபாடு செய்தனர்.

முதல்வர் விரைவில் பூரண குணம் அடைய வேண்டும் என்று பிரார்த்தனை செய்தனர்.